

# இந்த ஆண்டு
# தீபாவளிக்கு

எமது கலர் ஒன்றல்ல, பல!
எமது டிசைன் ஒன்று, இரண்டல்ல!!
பலப் பல!!
அவைதான்

# ராசி கதம்பம்

**(RASI ASSORTMENT)**



இந்தக் கதம்பத்திலிருந்து, உங்களுக்குத் தேவையான கலரிலும், பிடித்தமான டிசைன்களிலும் பட்டுப்புடவைகளைத் தேர்ந்தெடுத்து உற்சாகமாகத் தீபாவளி கொண்டாடுங்கள்!



ராதா சில்க் எம்போரியம்
சென்னை-600004

ராதா சில்க் எம்போரியம்
29, கோவிந்த் மஹால்,
86-B, மரைன் டிரைவ், G.ரோடு
பம்பாய்-400002

சார்பு நிறுவனம் : ராதா சில்க்ஸ்
'தன் பில்டிங்ஸ்' மவுண்ட் ரோடு,
சென்னை-600002

ராதா சில்க்கின் 'ராசி'
உன்னத வாழ்வுக்கு ஆசி

EP.RASI.

கொள்ளைலாபம்
பதுக்கல்
கறுப்புச்சந்தை
கள்ளக் கடத்தல்
கறுப்புப்பணம்



கல்கி

மலர் 34

இதழ் 9



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# பசும் புல் புரட்சி!

'ஒருவனுக்கு உணவில்லையானால் உலகையே அழித்திடுவோம்' என்றார் பாரதி. வழக்கம்போல் இந்த ஆண்டும் அவருக்கு விழா எடுத்துப் பேசித் தீர்த்தாகிவிட்டது. தமிழகத்தில் படி அரிசி ஏழு ரூபாய் விற்கிறது !

ராமராஜ்யம் நடக்க வேண்டும் என்று ஆசைப்பட்ட மகாத்மாவின் ஜெயந்தி கொண்டாடப் போகிறோம், இன்னும் சில நாட்களில். வங்கம், குஜராத், ராஜஸ்தான், பீகார் போன்ற மாநிலங்களில் கடுமையான பஞ்ச நிலைமை தோன்றியுள்ளது. வங்கத்தில் பட்டினிச் சாவுகளே நிகழ்ந்துள்ளன.

'பசுமைப் புரட்சி, பசுமைப் புரட்சி' என்று தொண்டை வரளும் மட்டும் கோஷமிட்டுவிட்டோம். மக்கள் பசும்புல் தின்னும் புரட்சிகரமான நிலைக்கு வந்துவிட்டார்கள், பல பிரதேசங்களில் ! வீடு வாசல்களைத் துறந்து நகர்ப்புறங்களுக்கு நகர்கிறார்கள் வேறு பல இடங்களில் !

மொரார்ஜி தேசாய்க்குப் பஞ்சப் பகுதி மக்கள் வரைந்துள்ள கடிதத்தில் 'டாங்க்' நிறைய தண்ணீர் அனுப்ப வேண்டாம், விஷத்தை அனுப்பிவிடுங்கள் என்று எழுதியுள்ளனர். எவ்வளவு கஷ்டம், விரக்தி இருந்தால் இப்படி எழுதத் தோன்றும் ?

எங்கே தவறு செய்தோம்? ஏன் இந்த நிலைமை? ஆத்ம பரிசோதனை தேவை. இதை நமது தலைவர்கள் செய்வதில்லை. உணர்ச்சிவசப்பட்டு உளுத்துப் போன கொள்கைகளையே உடும்புப் பிடியாகப் பற்றிக்கொண்டு மோசமான நிலையைப் படுமோசமாக்குகிறார்களே ஒழிய யதார்த்த நோக்கில் சிந்தித்து நாட்டின் ஒட்டு மொத்தமான நலனைக் கவனிப்பதில்லை.

நிலச் சீர்திருத்தத்தில் ஆரம்பித்து அரசாங்க மொத்த தானிய வியாபாரம் வரை பல தவறுகளைச் செய்துவிட்டோம். திட்டங்களில் தொடக்கத்திலேயே விவசாயத்துக்கு முக்கியத்துவம் தந்திருக்க வேண்டும். ராட்சத ஆலைகள் நிறுவுவதில் மோகம் கொண்டோம். 'எங்கள் மாநிலத்தில் ஓடும் நீரை உனக்கு ஏன் தரவேண்டும்?' என்று அண்டை மாநிலத்தைப் பார்த்துக் கேட்பது எவ்வளவு அசிங்கம்! அராபிய எண்ணெய் விலை ஏற்றம் காரணமாக ரசாயன உர விலை கூடிவிட்டது. விவசாயம் லாபகரமாக இல்லை. லெவி முறை, அதிகாரிகள் கெடுபிடி, விவசாய வருமான வரி, நில உடைமைச் சட்டங்கள் முதலியன எல்லாம் விவசாயத்தில் மக்களுக்கு இருக்க வேண்டிய ஆர்வத்தைக் கொன்றுவிட்டன.

இவ்வளவையும் செய்துவிட்டு, ''புரட்சி, புரட்சி'' என்று அடித்துக் கொண்டால் அது எழுத்துப் புரட்சியாகவும் பேச்சுப் புரட்சியாகவும்தான் இருக்கும். பசுமைப் புரட்சி ஏற்படாது.

பருவமழை பொய்த்தது என்று காரணம் கூறி தப்பப் பார்ப்பார்கள். ஆனால் சில ஆண்டுகளில் பருவ மழை பொய்க்கும் என்பதைக் கணக்கில் எடுத்துக் கொண்டே திட்டங்கள் தீட்டப்படுகின்றன. 'உணவு கொடுக்கிறேன், கொடுக்கிறேன்!' என்று சொன்ன மகானுபாவனிடம் ஓர் ஆண்டில் நன்றாக விளைந்தபோது கர்வமடைந்து பகைத்துக் கொண்டோம். இன்று அவனிடமே கையேந்த வேண்டிய அவல நிலை !

தவறுகள் பல நேர்ந்துவிட்டன. போனது போகட்டும். இப்போது நிலவுகிற பஞ்சத்தைப் பார்த்தாவது நமக்குக் கண் திறந்தால் சரி. குறுகிய பிரதேசப் பித்து, கொள்கைப் பித்து, மூடப் பிடிவாதம் போன்றவை ஒழியட்டும். கொள்கைகள் மாறி, புதிய சிந்தனை, நவீன செயல் திறன் ஆகியவை விவசாயத் துறையில் புகட்டும். பஞ்சப் பிரதேசங்களுக்குத் தாற்காலிக நிவாரணமும் நாடு முழுவதுக்குமான நிரந்தர நன்மையும் ஏற்படட்டும்.

மஸ்தானையும் பகியாவையும் கண்ணி வைத்து வளைத்துப் பிடித்த பிரதமர், பஞ்சப் பேய்க்கு எதிராகப் போர்க் கோலம் பூணட்டும். யதார்த்த நோக்கையும் செயலூக்கத்தையும் ஆயுதங்களாகக் கொண்டால் நிச்சயம் வெற்றி காண்பார்.

# இப்பொழுது! யுகோபாங்க் உங்கள் டிபாஸிட்டுகளை கிட்டத்தட்ட

# மும்மடங்கு ஆக்குகின்றது




## நீங்கள் யுகோபாங்க் டிபாஸிட் ஸர்டிபிகேட் திட்டத்தில் பணம் போட்டு வைத்தால்!

இத்திட்டப்படி ரூ. 5000 டிபாஸிட் செய்கிறீர்கள் என்றால், அத்தொகை சரியாக 15 ஆண்டுகளில் கிட்டத்தட்ட மூன்று மடங்கான ரூ. 15,000 ஆகப் பெருகிவிடுகிறது நீங்கள் முதலில் போட்ட பணத்திற்கு இது எவ்வளவு கணிசமான தொகை! இத்திட்டம், குறைந்த தொகை ரூ 100 லிருந்து தொடங்கி அதற்கு மேல் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போகலாம்.

தாங்களே தங்களுக்கு உதவ
மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது




# யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCDC-20TAM



# கல்கி

ஆனந்த, புரட்டாசி 13 — செப்டம்பர் 29, 1974

## மாதிரிக்குச் சில!

**விஷமக் கவிதை :**

இந்த இதழிலிருந்து தொடர்ந்து சில வாரங்களுக்கு எழுதுகிறார் தமிழழகன். நாலு நாலு வரிதான். கொடுக்கு நீளமாக இருக்க வேண்டிய அவசியம் என்ன?

**எங்கப்பா ஒரு எக்ஸெண்ட்ரிக் :**

போட்டிக்கு வந்த கதைகளுள் ஒன்று. தந்தையின் குணச் சித்திரம் எப்படியானாலும் தந்தை மகன் என்ற பாசம் எங்கே போகும் ?

**பல்லவன் விபத்துக்கள் :**

தனி நபர் 'கமிஷன்' நியமித்தோம். ஆராய்ந்து பார்த்துப் பலரைச் சந்தித்துப் பேசி அறிக்கை சமர்ப்பித்திருக்கிறார் கோமதி சுவாமிநாதன்.

**பசும் புல் புரட்சி !**

பசுமைப் புரட்சி என்றுதான் சொல்லிக் கொண்டார்கள். நாட்டின் பல பகுதிகளிலும் நிலவும் பஞ்ச நிலவரத்தைப் பார்த்தால் தலைப்பு பொருத்தம் என்றே தோன்றுகிறது.

**மதுரைச் சீமை மயிலை ஸ்ரீமான் :**

நூற்றாண்டு ஜனன விழா காணும் ஓர் அறிஞருக்கு அஞ்சலி.

**ஊற்று :**

மூன்று தலைமுறையாகக் காணாத நீர் ஊற்றைக் கண்டான் விவசாயி. அவன் நிலத்தில் பெருக்கெடுத்தது நீர் மட்டும் தானா ?

---

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது! பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

பிறந்த நாளைய மிக்க மென்மையோடு
உங்கள் மேனி மிளிரப் பேருதவி

*Johnson & Johnson**



# காலை வாரும் வாரியம்!

தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் முதலில் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டது. அப்புறம் பேஷான அணுகுண்டாக ஒன்றைத் தூக்கி டமால் என்று போட்டது! அடுத்த ஹைட்ரஜன் குண்டை எப்போது வீசப் போகிறதோ தெரியவில்லை!

சென்னை நகரின் பல பகுதிகளிலும் வீட்டு வசதி வாரியம் கட்டிக் கொடுத்த வீடுகளுக்கு அவர்கள் கேட்டபடியே முன் பணமும் தவணைத் தொகைகளும் கொடுத்துக் குடியேறியவர்களிடம் இப்போது, வீடு கட்டுமானச் செலவுகள் அதிகரித்துவிட்டன, எனவே அதிகமாகப் பணம் தர வேண்டும் என்கிறது, வீ. வ. வா.

வீட்டு வசதி வாரியத்திடம் குடியிருப்புக்களுக்காக அணுகுபவர்கள் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் நடுத்தர வர்க்கத்தினர் தாம். ஏற்கனவே அதிகரித்துக் கொண்டிருக்கும் வாழ்க்கைச் செலவுகளால் வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ள இவர்கள் வீ.வ.வா.வின் இந்தப் போக்கினால் அதிர்ச்சி அடைந்துள்ளார்கள்.

மக்களுக்குச் சிரமம் என்பதோடு இந்தக் கட்டளை அநீதியுமாகும். குடியிருப்புக்களை அமைக்கும்போதே நிலத்தின் பெறுமானம், கட்டுமானச் செலவு இவற்றை நிர்ணயிப்பதுடன் அதைக் கட்டி முடிப்பதற்கு முன்னால் ஓராண்டில் அல்லது ஒன்றரையாண்டில் ஏற்படக்கூடிய விலைவாசி உயர்வையும் அவர்கள் கணக்கில் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அப்போது குடியிருப்புக்காக வீ.வ.வா.வை அணுகியவர்கள் தங்களுக்குக் கட்டி வருமா என்று யோசித்துக் காரியத்தில் இறங்கியிருப்பார்கள்.

இதைச் செய்யத் தவறியது வீ.வ.வாவின் தவறேயன்றிக் குடியிருப்புக்களைப் பெற்றவர்கள் குற்றமல்ல.

அடுத்து, வீ. வ. வாவின் அணுகுண்டு: நந்தனம் பகுதியில் குடியிருப்பவர்களை வீட்டைக் காலி செய்யச் சொல்லிவிட்டு அந்தக் கட்டடங்களை இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டு அதே இடத்தில் பல அடுக்கு மாளிகைகளைக் கட்டும் யோசனை!

வளர்ந்து வரும் நகரங்களில் வீட்டுவசதிகள் எப்படி எப்படி அமைய வேண்டும் என்று தீர ஆலோசித்து நிபுணர்களைக் கொண்டு திட்டம் தீட்டிச் செயல்பட வேண்டும். அவ்வாறின்றி நேற்று வீட்டைக் கட்டுவது இன்று இடிப்பது என்று ஆரம்பித்தால் அது வீட்டு வசதி வாரியம் அல்ல; காலிவாரிவிடும் வாரியம்!

## அநாகரிகம்

குற்றவாளிகள், பதுக்கல்காரர்கள், கள்ளக் கடத்தல்காரர்கள் ஆகியோரை வீதிகளில் நாலு பேர் காண இழுத்துச் செல்வது என்பதாக ஒரு பழக்கம் இப்போது தோன்றியிருக்கிறது. அடிக்கடி இது போன்ற செய்திகளைப் பத்திரிகைகளில் படிக்கிறோம். இது தொடர்ந்தால் நாம் நாகரிக சமுதாயத்தினர் என்று சொல்லிக் கொள்ளவே அருகதையற்றவர்களாவோம். சட்டம், ஒழுங்கு, நீதி இவற்றுக்கு முதலிடம் தரும் ஜனநாயகத்தில் இது போன்ற காரியங்களுக்கு இடமேயில்லை.

இவ்வாறு அவமானப்படுத்தப்படுகிறவர்கள் பகியா, மஸ்தான் போன்ற குண்டுப் பெருச்சாளிகளும் அல்ல. சிறு குற்றமிழைக்கும் சுண்டெலிகள்.

எப்பேர்ப்பட்ட கொடிய குற்றம் புரிந்தவனுக்கும் நீதிமன்றத்தில் தன் சார்பில்

வாதாடவும் வழக்கறிஞரை நியமித்துக் கொள்ளவும் ஜனநாயகத்தில் உரிமை உண்டு. அவன் குற்றவாளிதான் என்று நீதிபதி தீர்ப்பளிக்கும் வரையில் அவனைக் குற்றம் புரிந்ததாகக் கருதப்படுகிறவன் என்றுதான் எழுதவும் பேசவும் வேண்டும். இவ்வளவு பாதுகாப்பை ஜனநாயகம் தரும்போது அவர்களைக் குற்றவாளிகள் என்று அதிகாரிகளே தீர்மானித்துச் சாலையில் நாலு பேர்கள் பார்க்க விலங்கிட்டு இழுத்துச் செல்வது காட்டுமிராண்டித்தனம்.

பதுக்கலுக்கும் கள்ளக் கடத்தலுக்கும் ஊக்கமளிக்கும் உளுத்துப் போன பொருளாதாரக் கொள்கைகளைக் கட்டிக் கொண்டு அழும் அரசு இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதன் நோக்கம், தங்கள் மீது ஏற்படக்கூடிய மக்களின் கோபத்தைத் திசை திருப்பிவிடுவதுதான்!

## வள்ளுவர் கோட்டம்

ஐம்பது லட்சம் ரூபாய் செலவில் வள்ளுவர் கோட்டம் அமைக்க அரசு அடிக்கல் நாட்டிவிட்டது. சான்றோர்களான நமது முன்னோர்களுக்கு நினைவாலயங்கள் எழுப்புவதில் யாரும் தவறு சொல்ல மாட்டார்கள். நமது புராதனச் சிற்பக் கலைகள் பாதுகாக்கப்படுகின்றன; நமது ஸ்தபதிகள் தங்கள் ஆற்றலைக் காட்ட அரிய வாய்ப்பு.

ஆனால், 'நிரந்தரமான வேலை வாய்ப்புகளைத் தரக்கூடிய ஐந்தாறு தொழில்களை ஆரம்பித்திருக்கலாமே' என்ற பேச்சும் எழுவதற்குக் காரணம் இன்று நாட்டின் பொருளாதார நிலை அந்த அளவுக்குச் சீர்கெட்டிருப்பதுதான்.

'வள்ளுவர் கோட்டமும், பூம்புகாரும், கட்டபொம்மன் கோட்டையும் அரிசி விலையைக் குறைத்துவிடுமா?' என்ற கேள்வி எழத்தான் செய்யும். மக்களின் வரிப் பணத்தை இவற்றுக்குப் பயன்படுத்துகையில் மக்களுக்கு இவ்வாறு கேட்கும் உரிமையும் உண்டு.

மக்களிடமிருந்தே நன்கொடை பெறக் கௌரவமான நபர்களைக் கொண்ட குழு அமைத்து, திரண்ட நிதிக்கு ஏற்ப அரசும் ஒரு நன்கொடை அளித்து, வள்ளுவருக்கான நினைவுச் சின்னத்தை இன்னும் அடக்கமான முறையில் திட்டமிட்டிருந்தால் முதல்வர் ஏகோபித்த பாராட்டைப் பெற்றிருப்பார். மக்களின் நாடி பிடித்துப் பார்த்து அவர்களுக்கு அதிருப்தி ஏற்படாத வகையில் நாடாள்வதே ராஜதந்திரம்.

**குடிதழீஇக் கோலோச்சு மாநிலமன்ன**
**னடிதழீஇ நிற்கு முலகு.**

## திறக்கப்படாத பாலம்!

கெடிலம் நதிக்குக் குறுக்கே அமைக்கப்பட்ட பாலத்தைத் திறக்க மத்திய அமைச்சரை அழைத்தார்கள்; வரவில்லை! மாநில முதல்வரைக் கூப்பிட்டார்கள்; வரவில்லை! சரி ஒரு மாநில அமைச்சரையாவது வரவழைத்துவிடலாம் என்று எண்ணினார்கள்; அவரும் டபாய்த்துவிட்டார்! ஏராள செலவில் திறப்பு விழாவுக்கு ஏற்பாடாகியிருந்தது. அவ்வளவும் வீண். அதிகாரிகள் பாலத்தைத் திறக்காமலே திரும்பினார்கள். வேடிக்கை பார்க்க வந்த மக்கள் ஏமாற்றத்துடன் திரும்பினார்கள்.

மந்திரி வந்து அடிக்கல் நாட்டும் வரை காத்திருப்பதும் முதல்வர் வந்து திறந்து வைக்கும் வரை பொறுத்திருப்பதும் எதற்காக? பாலம் கட்டுதல், குடிநீர் வசதி செய்தல் போன்றவை மக்களின் நலனுக்காக மக்களின் வரிப் பணத்தைக் கொண்டு அரசு நிறைவேற்றும் இயல்பான பணிகள். இவை ஒவ்வொன்றுக்கும் விழா எடுத்து மந்திரிக்குப் பிராபல்யம் அளிக்க அதிகாரிகள் முயல்கிறார்கள் என்றால் ஒன்று மந்திரி இதை விரும்புவதாக இருக்க வேண்டும் அல்லது அதிகாரிகள் அவரைத் திருப்திப்படுத்த முயல்வதாக இருக்க வேண்டும். அச்சத்தின் விளைவான அசட்டுத்தனமாகவும் இருக்கலாம். விழா எடுத்துத்தான் ஆகவேண்டும் என்றால் அந்தப் பாலத்தைக் கடக்கும் முதல் லாரி டிரைவரைத் திறந்து வைத்துவிட்டுப் போகச் சொல்லுங்கள். குழாயைப் பயன்படுத்தும் முதல் இல்லத்தரசிக்கு மாலை மரியாதை செய்யுங்கள். வரி கொடுப்பவரைக் கௌரவித்தது போலவாவது இருக்கும்.

ராஜாஜி சிந்தனை

### அலட்சியப்படுத்தினார்கள்; அல்லல்படுகிறார்கள்!

புதிதாக அபிவிருத்தி அடைந்துவரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் என்பது விவசாய உற்பத்தித் திறனுடன் பின்னிப் பிணைந்துள்ளது. இத்தகைய நாடுகளில் அதிகபட்சமான தொழில் வளப் பெருக்கம் நடைபெறுவதாகக் கொண்டாலும்கூட அடுத்த முப்பது ஆண்டுகளுக்கு மூன்றில் இருவர் என்ற விகிதத்தில் மக்கள் விவசாயிகளாகவே இருப்பார்கள். இவர்களது வாழ்க்கைத் தரம் உயர வேணுமானால் முன்னேற்றம் என்பது கிராமப்புறங்களில் கண்கூடாக நிகழ வேண்டும். கிராமப்புறங்களிலும் அவற்றின் அருகேயுள்ள சிறு நகரங்களிலும் வாழ்க்கை ஆரோக்கியமும் இனிமையும் உடையதாக மாற வேண்டும்.

அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்துக்குத் திட்டமிடும் போது மனித உழைப்பு விவசாயத் துறையில்தான் நிரம்ப ஈடுபட்டிருக்கிறது என்பதை மறந்துவிடக் கூடாது. இதனைக் கவனியாது போனால் இதர திட்டங்கள், கொள்கைகள் எல்லாம் ஏமாற்றத்தில் முடியும்.

— சுயராஜ்யா, மார்ச் 21, 1964



Lovable
Lakshmi



# சிவத்தின் சக்தி; நாராயண சகோதரி

7



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**ம**காவிஷ்ணு மீனாக்ஷியைச் சுந்தரேசுவரருக்குத் தாரை வார்த்துக் கொடுக்கிறார். மதுரையில் இந்த ஐதிஹ்யம் சிற்பத்தில் வெகு அழகாக இருக்கிறது. அம்பாள் நாராயண சகோதரியாகவும், சிவத்தின் சக்தியாகவும் இருப்பதை அப்படியே கண்ணுக்கு முன்னால் கொண்டு வந்து காட்டுகிறது இந்தச் சிற்பம். இதைப் பார்த்துக் கொண்டே யிருந்தால் நம் மனசில் சைவ வைஷ்ணவ பேத பாவம் போய்விடும்.

பிரம்மத்தில்தான் ஸர்வ சக்தியும் இருக்கிறது. அந்த சக்தியால்தான் சகல பிரபஞ்ச காரியங்களும் நடக்கின்றன. பிரம்மம் பரமேசுவரன், சக்தி அம்பாள், ஜகத்தை எல்லாம் நடத்துவது மகாவிஷ்ணு என்றால், இவர்களும் கடைசியில் ஒருவருக்கொருவர் துளிகூட வித்தியாசமே இல்லாதவர்கள் தான் என்று தெரிகிறது. பிரம்மம், அதன் சக்தி, அந்தச் சக்தி செய்கிற காரியம் எல்லாம் வேறு வேறு இல்லை அல்லவா?

சாந்தமாக இருக்கிற பிரம்மம் சிவன், காரியங்கள் செய்து பரிபாலிக்கிறவர் மகாவிஷ்ணு என்று சொன்னாலும், இப்படிப்பட்ட வித்தியாசம் கற்பிப்பதுகூட முழுக்கச் சரியில்லை என்று உணர்த்துகிற வகையில் இரண்டு ராஜாக்களைப் பார்க்கிறோம். ஒருத்தர் ரங்கராஜா, மற்றவர் நடராஜா. ரங்கராஜா இருக்கும் ஸ்ரீரங்கத்தைத்தான் வைஷ்ணவர்கள் 'கோயில்' 'கோயில்' என்று சொல்கிறார்கள். அதே மாதிரி சைவர்கள் ''கோயில்'' என்றால் அது நடராஜா இருக்கிற சிதம்பரம்தான். இந்த இரண்டு மகா க்ஷேத்திரங்களில் உள்ள ரங்கராஜா, நடராஜா இரண்டு பேரும் தென் திசையையே பார்த்துக் கொண்டிருப்பது விசேஷம். தெற்கு யமனின் திக்கு. நமக்கு மரண பயமில்லாமல் நம்மை அமரமாக்குகிற மூர்த்திகளாதலால் யமனுக்கு எதிர் முகம் காட்டுகிறார்கள்.

ரங்கம், அல்லது அரங்கம் என்றால் சபை. சிதம்பரத்தில் நடராஜா இருக்கிற சந்நதியைச் சபை என்றுதான் சொல்கிறோம்.

சபையில் நர்த்தனம் செய்வதுதான் பொருத்தம். ஆனால் இந்த இரண்டு சபைகளில் ஒருத்தர்தான் நர்த்தனம் செய்கிறார். சாந்த நிலையில் பிரம்மமாக இருக்கப்பட்டவர் என்று நாம் சொல்கிற நடராஜாதான் ஆனந்தக் கூத்தாடுகிறார். ஜகத் பரிபாலகரான மகாவிஷ்ணுவோ திரு அரங்கத்தில் பரம சாந்தமாக உறங்குகிறார். சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் நாம் பங்கிடு செய்கிற தொழில்களின்படி பார்த்தால் இது தலைகீழாக இருக்க வேண்டும் அல்லவா? இதிலிருந்து என்ன தெரிகிறது? முத்தொழில், ஐந்தொழில் என்றெல்லாம் பிரித்து, நாம் ஒவ்வொன்றுக்கும் ஒரு மூர்த்தியைச் சொன்னாலும்கூட இதுவும் நம் சிற்றறிவுக்கு எட்டுவதற்காகப் பராசக்தி எடுத்துக் கொண்ட பல தோற்றங்கள்தான். அம்மூர்த்திகள் அடியோடு பிரிந்து பிரிந்து இருப்பதாக நினைக்கக் கூடாது. இதைத்தான் இரண்டு ராஜாக்களும் நமக்கு உணர்த்துகிறார்கள் — இவருடைய காரியத்தை அவரும் அவருடைய காரியத்தை இவரும் செய்கிற மாதிரி இரண்டு சபைகளில் நடிக்கிறார்கள்.

தெற்கே பார்த்துக் கொண்டிருக்கிற இன்னொருத்தர் தக்ஷிணாமூர்த்தி. இவர் பரம ஞானமூர்த்தி. அவருடைய சித் சக்திதான் அம்பாள். அந்த சைதன்யம்தான் சிவ—விஷ்ணுவாக, மும்மூர்த்திகளாக, முப்பத்து முக்கோடி தேவதைகளாக, ஏன், புல் பூண்டு பக பட்சி மநுஷ்யர்கள் உட்பட சகலமாகவும் ஆகியிருக்கிறது. இவற்றிலே குறிப்பாகப் பாரத தேசம் முழுவதும் சிவபெருமான், திருமால் இவர்களை முழுமுதல் கடவுளாக வழிபடுவதால் நாம் பேத புத்தி இல்லாமல் இருப்பதற்காக மனசில் எந்நாளும் மறவாமல் இருக்க வேண்டியது என்னவென்றால்:

**பராசக்தியின் மற்றொரு உருவமே திருமால். பராசக்தியை விட்டுப் பிரிக்க முடியாத பொருளே சிவம்.**

எல்லாவற்றுக்கும் உள்நின்று இயக்குகிற அந்தச் சக்தியை நாம் பக்தி செய்தால் தாயாக வந்து ஞானப்பால் கொடுத்து நம்மை ரட்சிக்கிற அம்பாளாகிறாள்.

அவளது அநுக்கிரகம் இல்லாவிட்டால், நாம் சவத்துக்குச் சமம்தான். நாம் செய்கிறதாக நினைக்கிற சகல காரியங்களுக்கும் எண்ணங்களுக்கும் அவள் தருகிற சக்திதான் காரணம். எவருக்குமே நம் சக்தியினாலேயே காரியங்களைச் செய்து கொள்கிறோம் என்று அகம்பாவப்படக் கொஞ்சம்கூட நியாயம் இல்லை. நம்மை நடத்தி வைக்கும் அந்தப் பராசக்தியை நினைத்து, நாள்தோறும் ஒரு நிமிஷமாவது, 'என் சிறு சக்தி உன்னிடமிருந்து தெறித்த ஒரு திவலை; இதை உன் சித்தப்படியே நடத்தி வையம்மா' என்று அர்ப்பணம் பண்ணுவோம்.

'இதுவே மனுஷ்ய குணங்களில் முதலாவதாகச் சொல்லப்படுகிற நன்றி;

இதே பூஜை;

இதே ஸ்நானம் — அகம்பாவ அழுக்கைத் துடைத்து நம் உயிரைச் சுத்தமாக்குகிற ஸ்நானம்.

# பல்லவன் விபத்துக்கள்: பலமுனைப் பிரச்னைகள்!

**திரு எஸ். கோபாலன், குரோம்பேட்டை: தினசரிப் பிரயாணி:**

இந்த டிரைவர்களுக்குச் சில தொல்லைகள். 'பீக்' அவரில், இரண்டு பஸ்ஸுக்கான பயணிகளுடன் ஒரே பஸ் போகும்போது டிரைவரின் முதுகில் சாய்ந்தாற்போல் நின்று அவருடன் கதை பேசுகிறார்கள். அப்புறம் அந்த டிரைவரின் கவனம் என்ன ஆவது? அவர் கவனம் பிசகினால் பாசஞ்சர்கள் கதிதான் என்ன ஆவது?

**ஒரு கண்டக்டர் (பெயர் சொல்ல விரும்பவில்லை):**

பொதுஜனங்கள் இருக்காங்களே! அவங்க 'இடம் இல்லே' என்று கையைக் காட்டி, 'டபுள் விசில்' கொடுத்த காலத்திலேயும் ஏறினாங்க! பேசினாங்க. இப்போ நிறுத்தி நிதானமாக எல்லாரையும் ஏற்றிக் கொண்டாலும், 'என்னப்பா, இப்படித் தனிக்கிறீங்க! நாங்க மூச்சு விடணுமா, வேண்டாமா?'ன்னு கேட்கிறாங்க! அவங்களே வண்டியிலே இருக்கிற 'லோடை'ப் பார்த்து அனுசரிச்சு முன் பஸ்ஸிலேயோ, பின் பஸ்ஸிலேயோ போகலாமே!

ஆனால் ஒண்ணு! 'ஓவர்லோடிங்கி'னாலே இதுவரை என் பஸ் விபத்துக்களை ஏற்படுத்தலே! இன்செண்டிவ்வுக்கும் ஆக்ஸிடெண்டுக்கும் சம்பந்தமில்லே என்பது என் அபிப்பிராயம்!

**மற்றொரு கண்டக்டர் (இவரும் பெயர் சொல்ல விரும்பவில்லை):**

இந்த 'ஸ்டூடன்ஸ்' ரகத்தை ஏதாவது சொல்லிட்டா உடனே கலாட்டா! அவங்க செய்ற ஃபுட்போர்ட் டிராவல் ஆக்ஸிடெண்டுகளுக்கு அஸ்திவாரமாக இருக்கு. அவங்க அவங்க வீட்டிலே இருக்கிற பெரியவங்க கண்டிச்சு இதைத் தடுக்கணும். எங்களாலே என்ன செய்ய முடியும்?

''ஏறாதே''ன்னு, ''ஏனய்யா! உனக்குத்தான் இன்செண்டிவ் கொடுக்கிறாங்களே?''ன்னு கூச்சல் வருது. 'இன்செண்டிவ்' தேவைதான். 'ஆக்ஸிடெண்ட்' வேண்டாம் சாமி!

**ஒரு டிரைவர் (இவரும் தம் பெயரைத் தெரிவிக்க விரும்பவில்லை):**

'இன்சென்டிவ்' அடிப்படையிலே போட்டி, பொறாமை இதுகளும் கூடவே வளர்ந்துகிட்டு வருகிறது. அடுத்த ஸ்டாப்பில் முன்னால் போய் நின்று பாசஞ்சர்களை ஏற்றிக் கொள்ள 'ஓவர்டேக்' பண்ணுவது சகஜமாப் போச்சு! ஓவர்லோடிங்காலே ஆக்ஸிடெண்டுகள் ரொம்பக் குறைச்சல். 'ஓவர்டேக்கிங்லே' ஆக்ஸிடெண்டுகள் ஜாஸ்தி.

**மற்றொரு டிரைவர் (இவரும் தம் பெயரை வெளியிடவில்லை):**

எங்களுக்குக் கொஞ்ச நாள் முன் வரை ஒரு கெட்ட பெயர். 'தண்ணி போட்டுட்டு வண்டியை எடுக்கிறாங்க'ன்னு! ஆதாரமில்லாத விஷயம். டியூட்டி முடிஞ்சு போனப்புறம் சில பேர் மது சாப்பிட்டது உண்மை! ஆனால் வேலை நேரத்திலே மூச்சு விடப்படாது. ரோடுகளிலே ஓரமா நடக்க நம்ப ஜனங்கள் இன்னும் கத்துக்கலே. அவங்க அவங்க வீட்டு முற்றத்திலே நடக்கிற மாதிரி நடக்கிறாங்க. அவங்க துரதிர்ஷ்டமும் எதிர்பாராமல் வண்டிகளிலே ஏற்படற



'மெக்கானிக்கல் டிபெக்ட்'டும் சேர்த்துக்கிட்டா விபத்து வந்துடுது. பல விபத்துக்களிலே டிரைவர்களும் மாட்டிக்கிறாங்கங்கறதை மறந்துடக் கூடாது.



**ஒரு டைம்கீப்பர் (பெயர் சொல்லவில்லை):**

எங்களுக்கு கைக்கப் பணம் கிடையாது. அதை நாங்கள் எதிர்பார்க்கவும் இல்லை. ஆனால் ஒரு வதந்தியை நாங்கள் மறுத்தாக வேண்டும். பஸ் கண்டக்டர்களும், டிரைவர்களும் எங்களைக் கைக்குள் போட்டுக்கொண்டு டிரிப் டயத்தைவிட அதிகமாக, வசூலை எதிர்பார்த்து எடுத்துக் கொண்டு, நேரத்தை 'அட்ஜஸ்ட்' செய்கிறார்கள் என்பதுதான் அந்த வதந்தி. அவர்கள் இடைஇடையே கூட்டத்தைச் சமாளித்து டிக்கட் கொடுக்க வண்டிகளை நிறுத்தினாலும் எப்படியோ டயத்தை மேக்கப் செய்துவிடுகிறார்கள். ஒரு வேளை, இந்த நீண்ட காலதாமதமும் அதை ஈடுகட்ட எடுத்துக் கொள்ளும் அதிக வேகமும் விபத்துக்களைத் தோற்றுவிக்கலாம். இந்த 'இன்ஸென்டிவ்' வந்த பிறகு சீரான ஓட்டத்தை டிரைவர்கள் கடைப்பிடிக்கிறார்களா என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம்தான்!

**போலீஸ் போக்குவரவு புலனாய்வுத் துறை அதிகாரி திரு ஜே. எம். ரஞ்சிதம்:**

ஒரு விபத்து நடந்தால், பொதுமக்கள் மற்றும் அந்தப் பஸ்ஸில் பிரயாணம் செய்பவர்கள், ஒழுங்காகச் சாட்சியம் சொல்ல வருவதில்லை. 'நமக்கு எதற்கு வம்பு' என்று ஒதுங்கிக் கொள்ளும் சுபாவம் தவறு செய்யும் டிரைவர்களுக்குச் சாதகமாகப் போய்விடுகிறது. பொது மக்கள் கோபத்துக்குப் பயந்து ஓடி ஒளிந்து பிறகு போலீஸில் சரணடையும் இந்த டிரைவர்களை யார்தான் ஜாமீன் கொடுத்து அழைத்துச் செல்வது என்ற நியதி இல்லை. ஒரு டெம்பரரி கண்டக்டர்கூட ஜாமீன் கொடுக்கலாம்! அப்புறம் கேஸ் நடக்கும்போதெல்லாம் அந்த டிரைவர் சிக் ரிப்போர்ட் செய்துவிடுவார். ஜாமீன் கொடுத்த கண்டக்டர் வேலையைவிட்டே போயிருப்பார்! கேஸ் இழுத்துக் கொண்டே போகிறது. பொறுப்பான, போதிய பயிற்சி உள்ள டிரைவர்களை அமர்த்தினால் விபத்துக்களைத் தவிர்க்கலாம்.

**திரு தில்லைநாயகம், மானேஜிங் டைரக்டர், பல்லவன் டிரான்ஸ்போர்ட்:**

போக்குவரத்து விபத்துக்களுக்கு இரண்டு காரணங்களைச் சொல்லலாம். 1. வேகமாக வளர்ந்து வரும் போக்குவரத்து நெரிசல், 2. டிரைவர்களில் சிலபேரிடம் தோன்றியிருக்கும் வேகமனப்பான்மை. முதல் காரணம் இன்றியமையாதது. இரண்டாவது காரணத்துக்கான சூழ்நிலைகளைப் பற்றி நாங்கள் ஓர் ஆராய்ச்சியே செய்து வருகிறோம். வேலை நாட்களில், அதாவது ஞாயிற்றுக்கிழமை தவிர மற்ற நாட்களில், 45 சத விபத்துக்கள் காலை 9லிருந்து 12 வரையிலும் மாலை 4லிருந்து 7 வரையிலும் நிகழ்கின்றன. ஞாயிற்றுக் கிழமைகளில் விபத்துக்கள் குறைவு. வருடத்தின் இரண்டாவது பகுதியில்—அதாவது ஜூலையிலிருந்து டிசம்பர் வரையில் முன் பகுதியைக் காட்டிலும் விபத்து விகிதம் அதிகம்.

இதில் ஒரு விசேடம் என்னவென்றால் நாற்பது சதவிகித விபத்துக்கள், பஸ்கள் ஓடும்போது ஏறுவதிலும் இறங்குவதிலும் நிகழ்கின்றன. இதற்குப் பிரயாணிகள்தானே பொறுப்பு? ஃபுட்போர்டில் தொத்திக் கொண்டு போவதால் ஏற்படும் விபத்துக்கள் பத்து சதவிகிதம். இதற்கும் பிரயாணிகள் தானே பொறுப்பு?

இப்போது டிரைவர்களின் ஆரோக்கிய நிலையைப் பரிசோதிக்க ஆறுஆண்டுகளுக்கு ஒரு முறை என்ற கணக்கில், ஏற்பாடு செய்திருக்கிறோம். மேலும் கனரக வண்டிகளை ஓட்டி லைசென்ஸ் பெற்றவர்களைத்தான் டிரைவர்களாகத் தேர்ந்தெடுக்கிறோம். அவர்களுக்கு நகரப் போக்குவரத்துக்கான விசேஷப் பயிற்சிகளும் கொடுக்கிறோம்.

தொடர்ச்சியாக நாலு விபத்துக்களில் சம்பந்தப்படும் டிரைவர்களை, வண்டி ஓட்டும் பொறுப்பிலிருந்து எடுத்து 'டிப்போ' வேலைகளுக்கு அனுப்புகிறோம். அவர்களுடைய அன்றாட 'பாட்டா' நஷ்டம். அதுவே அவர்களுக்குத் தண்டனையாகவும் ஆகி விடுகிறது.




விபத்தில் சம்பந்தப்படும் டிரைவர்கள் உடனடியாக 'சஸ்பெண்ட்' செய்யப்படுகிறார்கள். விசாரணைக்குப் பிறகு அவர்கள் மேல் குற்றம்ருசுவாகாவிட்டால்தான் மீண்டும் வேலைக்கு அனுமதிக்கப்படுவார்கள். கோர்ட்டுக்குப் போகும் வழக்குகளுக்கு அவர்களுக்கு உதவச் சட்ட ஆலோசகர்களும் இந்த நிறுவனத்தில் இருக்கிறார்கள்.

பொதுவாக ஒரு விபத்து நிகழ்ந்தவுடன் அதற்கு 'மெக்கானிக்கல் டிஃபெக்ட்'தான் காரணம் என்று சாதிக்கும் டிரைவர்கள் அதிகம் பேர். யந்திர சாதனக் கோளாறால் விபத்துக்கள் ஏற்படும் சந்தர்ப்பம் மிகக் குறைவு. காரணம் விலையைப் பார்க்காமல் உபரிப் பகுதிகளை வாங்கி அவ்வப்போது பொருத்திக் கொண்டே யிருக்கிறோம். இதற்காக டிப்போக்களில் 'மெயின்டினன்ஸ்' ஊழியர்களுக்கும் 'இன்ஸென்டிவ்' தொகை உண்டு.

பொதுவாக மனித அஜாக்கிரதையால் தான் விபத்துக்கள் நிகழ்கின்றன. டிரைவரும் சைக்கிள் ஓட்டிகளும் சாலையை எக்கச்சக்கமான இடங்களில் கடப்பவர்களும் எல்லோருமே மனிதர்கள்தாமே!

இப்போது பத்திரமாக பஸ்களை ஓட்டிச் செல்பவர்களுக்கு விசேஷ 'அவார்டு' கொடுக்கலாமா என்ற யோசனையும் பரிசீலனையில் இருக்கிறது.

**பல்லவன் போக்குவரத்து நிறுவனம் கொடுக்கும் விவரங்கள்:**

தொங்கிக்கொண்டு ஃபுட்போர்ட் பிரயாணத்தால் ஏற்படும் விபத்துக்கள் 10 சதம்.

அதிகப்படியான விபத்துக்கள் ஏற்படும் இடங்கள்: 'நேதாஜி போஸ் சாலை, பேசின் பிரிட்ஜ் சாலை, அண்ணா சாலை, திருவல்லிக்கேணி ஹைரோட்.

**முடிவுரை**

எந்த நேரத்திலும் ஒரு குறிப்பிட்ட அளவு பிரயாணிகள்தான் அதிகப்பட்சம் ஏறலாம் என்ற நியதியைப் பஸ் போக்குவரத்து நிர்வாகம் கொண்டுவர வேண்டும். இதனால், கலக்ஷன் போனஸ் பற்றிய போட்டி உணர்ச்சி குறையும்; பஸ்களின் தேய்மானம் குறையும்; பிரயாணிகள் ஏறுவது, இறங்குவதில் கண்டக்டர், டிரைவர் கவனம் அதிகமாகும்; விபத்துக்கான சந்தர்ப்பங்கள் குறையும்.

இந்த நிலையை அவ்வப்போது சோதனை செய்யவும், இடைவழியே அதிகாரிகள் இருக்க வேண்டும்.

எழும்பூர் ரயில் நிலையம், அண்ணா சாலை போன்ற இடங்களிலிருந்து காலை மாலை நேரங்களில் தேவையான 'ஷட்டில் சர்வீஸ்' பஸ்கள் விட்டுக் குறுகிய தூரப் பிரயாணிகளுக்கு முன்போல உதவ வேண்டும். 'இன்ஸென்டிவ்' திட்டம் வந்தபிறகு இந்தப் பஸ்கள் ஓடுவதில்லை.

உயிர்ச் சேதம் விளைவிக்கும் விபத்துக்குக் காரணமாக இருக்கும் டிரைவர்கள் லைசென்ஸ்களை நிரந்தரமாக ரத்து செய்ய வேண்டும்.

அதிகரித்து வரும் பிரயாணிகளின் எண்ணிக்கையை ஈடுகட்ட அதிக பஸ்களை விட ஏற்பாடு செய்ய வேண்டும்.

– கோமதி சுவாமிநாதன்

## வண்ண நூலில் கண்கவர் கோலம்!

கடைகளில் 'ஸ்பைரோகிராப்' என்று பற்களைக் கொண்ட சக்கர செட் விற்கப்படுகிறது. இதைக் கொண்டு விதம் விதமான டிசைன்கள் போடலாம். அது போலவே வண்ண நூல்களில் விதம் விதமான டிசைன்கள் தயாரிக்கத் தேவைப்படுவது மின் உபகரணமான ரீப்பர் கட்டைகள், வண்ண நூல்கள், ஆணிகள், கறுப்புத் துணி ஆகியவை. வெளியே சதுரமாகவும் உட்புறம் வட்டமாகவும் ரீப்பர் கட்டைகளை அமைத்து அவற்றின்மீது கறுப்புத் துணி பரப்பிக் குறிப்பிட்ட இடைவெளிகளில் நிறைய ஆணிகளை அடிக்க வேண்டும். பிறகு பல்வேறு வண்ண நூல்களைக் கொண்டு பல்வேறு முறைகளில் ஓர் ஆணியிலிருந்து மற்றோர் ஆணிக்குப் பின்னிக்கொண்டு போவதன் மூலமாக விதம் விதமான வண்ண டிசைன்களைத் தயாரிக்கலாம். இந்த யோசனை சொன்னவர்கள்: டி. வி. எஸ். லூகாஸ் நிறுவனத்தைச் சேர்ந்த திரு அமலோரும் திரு கோபியும்.

மேலட்டை வண்ணப்படம்: பரணிநாதன்

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமிகுமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதாலும், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளது. அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது. இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

# மதுரைச் சீமா - மயிலை ஸ்ரீமான்

ராமநாதபுரம் அரசரின் சுவீகாரம் செல்லுமா என்பது ஒரு முக்கியமான பெரும் வழக்கு. சென்னை வி. பாஷ்யம் ஐயங்காரை இதற்கென வாதாட வைக்க வந்தார் சமஸ்தான சட்ட ஆலோசகர் சேஷாத்திரி ஐயங்கார். மதுரையிலிருந்து அவருடன் வந்த அவரது செல்வ மகன் பள்ளி மாணவன் சீமாவைப் பாஷ்யம் அய்யங்காருக்குப் பிடித்து விட்டது. தமது ஏழு வயதுப் பெண் ரங்க நாயகியைப் பதினாறு வயது சீமாவுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தார். ஆரம்பப் பள்ளி முதலே எதிலும் எப்போதும் வகுப்பில் முதலாவது வந்த சீமா பட்டப் படிப்பில் ஆங்கிலத்திலும் பொருளாதாரத்திலும் மாகாணத்திலே முதலாக வந்து தங்கப் பதக்கங்கள் பெற்றார். ஐ. ஸி. எஸ். படிக்க மகனுக்கு ஆசை. தந்தையோ 'என் காலம்வரை கடல் கடக்க வேண்டாம். மாமனாரைப் போல் வக்கீலுக்குப் படி' என்றார். சீமாவும் சட்டம் படித்தார். மாமனாரிடம் தொழில் பயின்றார். சில ஆண்டுகளிலேயே மாதம் இருபதாயிரம் சம்பாதிக்கும் அளவு பெரிய வக்கீலானார். நற்பணிகளுக்கு வாரி வழங்கும் வள்ளலாகி, ''மயிலை ஸ்ரீமான்'' என்று எல்லாரும் பாராட்டும் அளவு புகழ் பெற்றவரானார் — எஸ். ஸ்ரீநிவாச அய்யங்கார்.

எத்தனையோ சிக்கலான வழக்குகளை ஏற்றுத் திறமையுடன் நடத்தியவர் இவர். பின்னாளில் புகழ்பெற்ற பல வக்கீல்களுக்குத் தொழில் கற்பித்தவர் இவர். இவரது சட்ட ஞானத்தை மதித்த அந்தக் காலத்து ஆங்கில அரசு இவரை ''அட்வகேட் ஜெனரல்'' ஆக்கியது. அரசாங்கத்துக்குச் சட்ட ஆலோசனை தருவது இவரது பணி. ஒருமுறை 'ஹோம் ரூல்' இயக்கத் தலைவியான அன்னி பெஸண்ட் அம்மையாரின் ஒரு பேச்சு சட்ட விரோதம் என்று ஆங்கில அரசு கருதி ஐயங்காரை ஆலோசனை கேட்டது. பெஸண்ட் அம்மையாரின் கருத்துக்கள் இவருக்கு உடன்பாடல்ல. ஆயினும் கைது செய்யும் அளவு பேச்சு சட்ட விரோதமானதல்ல என்றே ஆலோசனை தெரிவித்தார்.

நாட்டின் தேசிய எழுச்சியைத் தொடக்கத்திலிருந்தே ஊன்றிக் கவனித்து, பங்கு ஏற்றவர் ஸ்ரீநிவாச ஐயங்கார். ஜாலியன்வாலாபாக் கொடுமைக்குப் பிறகுதமது பதவியையும், ஆங்கில அரசு அளித்த கௌரவப் பட்டங்களையும் உதறித் தள்ளினார். வக்கீல் தொழிலையும் விட்டு விட்டு நாட்டுப் பணிகளில் கவனம் செலுத்தினார்.

காந்திஜி போன்ற தலைவர்களது தேசப்பற்றுக்குக் குறைந்ததல்ல ஐயங்காரின் தேச பக்தி. ஆனால் விளைவை நோக்கிச் செல்லும் மார்க்கங்களில் இவர்கள் கருத்து மாறுபட்டது. தென்னாட்டில் சுதந்திர எண்ணமும் இயக்கமும் பரவ ஐயங்காரின் முயற்சியும் உழைப்பும் பெரிதும் உதவின. பல தேச பக்தர்களின் குடும்பச் செலவுப் பொறுப்பை இவரே மேற்கொண்டார். முதலில் மாகாண காங்கிரஸிலும், பின்னர் தேசிய காங்கிரஸிலும் தலைமைப் பதவி ஏற்று மாநாடுகளை நடத்தினார். மத்திய சட்ட சபையில் காங்கிரஸ் கட்சித் துணைத் தலைவராக விளங்கி ஆங்கில ஆட்சியைச் சட்டபூர்வமாக எதிர்த்தார்! சுபாஷ்போஸுடன் ஒன்றிக் காங்கிரஸ் கட்சி உள்ளேயே ஒரு ஜனநாயகப் பிரிவைத் தொடங்கினார். அப்போது காங்கிரஸ் தலைவராக வந்த ஜவாஹர்லால் நேருவுக்கு. இவர்கள் இருவருடனும் இணைந்து போக முடியாததாலும், வேறு காரணங்களாலும் ஸ்ரீநிவாச ஐயங்கார் காங்கிரஸிலிருந்து விலகினார். ஆனால் நாட்டுப் பற்றிலிருந்து விலகவில்லை. சுமார் பத்தாண்டு காலம் இந்து சட்ட நுட்பங்களை ஆராய்ந்து நூலாக்கினார். அவரது சட்ட ஆராய்ச்சிகளே சுதந்திர பாரத சட்டங்கள் சிலவற்றுக்கு ஆதாரம் எனலாம்.

காந்திஜி சென்னைக்கு வந்தபோது இருமுறை தமது இல்லத்திலேயே விருந்தாளியாக வைத்திருந்தவர் ஐயங்கார். அரசியல் கருத்து வேற்றுமை நிலவியபோதிலும் இருவரும் ஒருவரை யொருவர் மதித்து நல்ல நண்பர்களாக விளங்கினர். தமது ஒரே மகள் அம்புஜம்மாள் காந்திஜியின் வார்தா ஆசிரமத்தில் சில நாட்கள் இருக்க ஆசைப்பட்டபோது தாமே மகளை அழைத்துச் சென்று அங்கே விட்டு வந்தார்.

வைதிகக் குடும்பத்தில் பிறந்தவர். வேதம் பயின்றவர். வாழ்க்கையின் கடைசி நாள் வரை ஜபம் செய்தவர். தமது முப்பத்தைந்தாவது வயதிலேயே ஜாதி வித்தியாசத்தின் அர்த்தமின்மையை உணர்ந்து, சமபந்தி உணவை ஒரு பெரும் இயக்கமாக நடத்திக் காட்டியவர் ஐயங்கார். பெண்களுக்கு மிக இளம் பருவத்திலேயே மணம் செய்து வைக்கும் வழக்கத்தையும் எதிர்த்தார்.



பெரிய பதவிகள் வகித்தவர். அதிகாரப் பதவியான அட்வகேட் ஜெனரல் பதவியும் பார்த்தவர்; மக்களின் அன்புப் பதவியான காங்கிரஸ் அக்ராஸனர் பதவியும் ஏற்றவர். இவற்றை ஏற்றபோது துள்ளாதது போலவே துறந்தபோதும் துயரப்படவில்லை. அவர் அடிக்கடி கூறியதுபோல்: ''சும்மா பேசுவதைவிட விவாதிப்பது நல்லது; விவாதிப்பதை விட ஆழ்ந்து படிப்பது நல்லது; ஆழ்ந்து படிப்பதை விடச் சிந்திப்பது நல்லது; சிந்திப்பதை விடச் செயல்படுவது நல்லது!''

எதிலும் ஆழ்ந்த விருப்பும் தீவிர வெறுப்பும் கொள்ளாமல் வாழ்க்கையை நன்கு வாழ்ந்து

காட்டிய அண்மைக் காலப் பெரியவர்களில் ஒருவர் ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்கார். குடும்பத்தினருடன் மிகவும் ஒட்டிப் பழகி அன்பை அழகாகக் காட்டிக் கொள்ளத் தெரிந்தவர். சிறந்த சிந்தனையாளராகவும் ஆழ்ந்த படிப்பாளியாகவும் ஒருபுறம் இருப்பார். ஆனாலும் எளிய நகைச்சுவையும் குழந்தையைப் போல் எல்லாவற்றிலும் மகிழ்ச்சியும் வியப்பும் காட்டுபவராகவும் இருப்பார். 'ரங்கநாயகி, ரங்கநாயகி' என்று எதற்கெடுத்தாலும் அன்புடன் அழைத்தபடி இருக்கும் இவர் சிறுமை கண்டு பொங்கும் முன்கோபி. ஆனால் கோபமெல்லாம் நீர்க்குமிழி வேகம்தான்.

ஸ்ரீநிவாச ஐயங்காருக்கு நூற்றாண்டு ஜனன விழா நடைபெறும் இன்று தேசப் பற்றுள்ள அரசியல் உலகமும், நீதி பிறழாத சட்ட உலகும் அவருக்கு அஞ்சலி செலுத்தும்; அவரிடமிருந்து ஏராளமான நன்கொடைகள் பெற்ற நிறுவனங்கள் அவர் நினைவை வாழ்த்தும்; அவர் நினைவாக எழுந்த ஸ்ரீநிவாச–காந்தி நிலையம் போன்றவை அவர் பணிகளைப் போற்றும்; அவரது திருமகள் சாரு பார்த்தசாரதியின் தெய்வப் பணியிலும், திருமகள் அம்புஜம்மாளின் சமூகப் பணியிலும் அவர் நீடு வாழ்கிறார் எனலாம்.

— தம்பி சீனிவாசன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



V பாரி கம்பெனி, வெள்ளி விழா ஆண்டில் ஜப்பானிலிருந்து இளம் டேபிள் டென்னிஸ் நிபுணர்களை வரவழைத்து இந்திய சாம்பியன்களோடு ஆட வைத்தது. 'ஜப்பானின் சிட்டிஜன்' கடிகாரக் கம்பெனியில் பணி புரியும் நகண்ட காரே தம் விருடி பிசா ஷாட்களினால் இந்திய டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரர்களை அசர வைத்தார்; பல பரிசுகளைத் தட்டிக் கொண்டார்! படத்தில் அவர் அருகே இருப்பவர் நோரிகோ டாகாமா.




V ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட் நிறுவனத்தின் வெள்ளி விழா அண்மையில் அமர்க்களமாக நடந்தேறியது. கம்பெனியின் சேர்மன், லார்டு ப்ளோடன் தலைமை வகித்தார். மத்திய நிதிமந்திரி திரு ஒய். பி. சவான் பிரதம விருந்தினராயிருந்து சிறப்பித்தார். தமிழ் நாடு அரசு சட்ட அமைச்சர் திரு செ. மாதவன் விழாவில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். இடது கோடியில் மானேஜிங் டைரக்டர் திரு ஏ. எம். எம். அருணாசலம்.



V "இன்றைய இந்தியாவின் சில தோற்றங்கள்" என்ற புகைப்படக் கண்காட்சி சென்னையில் நடக்கிறது. கோடாக் நிறுவனம் 150 வண்ணப் புகைப் படங்களைப் பார்வைக்கு வைத்திருக்கிறது.



அமரர் கல்கி நினைவுச் சொற்பொழிவில் ◀ 'தேசியம் வளர்த்த தமிழ்' என்ற தலைப்பில் திரு கா. திரவியம் நிகழ்த்திய கருத்துரை நூல் வடிவம் பெற்றுள்ளது. பழனியப்பா பிரதர்ஸ் நடத்திய வெளியீட்டு விழாவில் திரவியத்துக்கு மந்திரி வி. எஸ். பொன்னாடை போர்த்துகிறார்.

# சிவகாமியின் சபதம்

## பதினான்காம் அத்தியாயம்

## "வாழி நீ மயிலே!"

ஆயனரும் சிவகாமியும் அந்த விஸ்தாரமான சபா மண்டபத்துக்குள் பிரவேசித்தபோது மண்டபத்தில் வீற்றிருந்தவர்கள் அத்தனை பேருடைய கண்களும் அவர்கள் மீது சென்றன. அளவில்லா வியப்பும் குதூகலமும் ஆவலும் அந்த ஈராயிரம் கண்களிலேயும் ததும்பின.

சபையில் அப்போது வீற்றிருந்தவர்களில் ஒரு சிலர் ஒன்றரை வருஷத்துக்கு முன்னால் அதே மண்டபத்தில் நடந்த சிவகாமியின் அரங்கேற்றத்தின் போது அங்கே பிரசன்னமாயிருந்தவர்கள்; மற்றும் அநேகர் அந்த அரங்கேற்றத்தைப் பற்றிக் கேள்வியுற்றிருந்தவர்கள். சிவகாமியின் அரங்கேற்றம் அந்த மண்டபத்திலே நடந்து கொண்டிருந்த சமயத்திலேதான் முதன் முதலில் புலிகேசியின் படையெடுப்பைப் பற்றிய செய்தி கிடைத்ததென்பதையும், அதனால் அரங்கேற்றம் தடைப்பட்டதென்பதையும், அவர்கள் எல்லோரும் நினைவு கூர்ந்தார்கள். அந்தத் தடைக்குக் காரணமான புலிகேசிச் சக்கரவர்த்தி அச்சமயம் அந்தச் சபையில் வீற்றிருக்கும் அதிசயத்தை எண்ணிய போது அவர்கள் எல்லோருடைய கண்களும் மாறி மாறிச் சிவகாமியையும் புலிகேசியையும் நோக்குவனவாயின.

ஆயனரும் சிவகாமியும் சபா மண்டபத்துக்குள் பிரவேசித்து வரும் காட்சியைப் பார்த்தவுடன், எல்லோரையும் போல் வாதாபி மன்னரும் சிறிது நேரம் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தார். அஜந்தா மலையின் ஆழ்ந்த குகைக்குள்ளே அவர் கண்டிருந்த அற்புத வர்ணச் சித்திர உருவங்களில் ஒன்றுதான் உயிர் பெற்று எழுந்து தம் கண் முன்னால் நடந்து வருகிறதோ என்று அவருக்குத் தோன்றிற்று. சௌந்தரியவதிகளான எத்தனையோ பெண்களை அவர் பார்த்த



துண்டு. ஆனால், இம்மாதிரி நடை அழகு வாய்ந்த பெண்களைப் பார்த்தது கிடையாது. சிவகாமி நடந்து வந்த போது அவளுடைய பாதங்கள் பூமியில் பட்டனவோ படவில்லையோ என்று தெரியாதபடி நடந்தாள். சங்கீதக் கலையின் உயிர்த் தத்துவத்தை உணர்ந்து புலவன் பாடும்போது இசை எப்படி ஒவ்வொரு ஸ்வரமும் தனித் தனியாகவும் அதே சமயத்தில் ஒன்றோடொன்று இழைந்தும் கேட்கப்படுகிறதோ, அதே போல் சிவகாமி நடந்தபோது அவள் அடிகள் எடுத்து வைக்கிறாளோ அல்லது பூமிதான் அவளுடைய பாதங்களுக்குக் கீழே நழுவிச் சென்று கொண்டிருக்கிறதோ என்று தோன்றியது. சபா மண்டபத்திலிருந்த அத்தனைபேருடைய கண்களுக்கும் சிந்தனைக்கும் வேலை கொடுத்துக் கொண்டு பிரவேசித்த சிவகாமியோ, அவ்விதம் எல்லோருடைய கவனத்துக்கும் கண் நோக்குக்கும் தான் ஆளாகியிருப்பதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. உயர்குலத்துப் பெண்டிர்க்குரிய இயற்கையான நாணத்தினால் சிறிதளவு தலை குனிந்தவண்ணம் அவள் நடந்து வந்தாள். அவளுடைய உள்ளத்தில் அல்லும் பகலும் குடி கொண்டிருந்த கம்பீர முகத்துக்குரியவர் அந்தச் சபையில் எங்கே இருக்கிறார் என்று தெரிந்துகொள்ள அவளுக்கு அளவற்ற ஆவல் இருந்தது. எனினும், அந்த ஆவலைப் பெரு முயற்சி செய்து அவள் அடக்கிக் கொண்டு இயல்பாக எதிரே பார்த்துக் கொண்டு நடந்தாள்.





இரண்டு சக்கரவர்த்திகளும் வீற்றிருந்த இடத்துக்கு அருகில் வந்ததும், ஆயனர் கும்பிட்டு நிற்க, சிவகாமி நமஸ்கரித்து நின்றாள்.

மகேந்திர பல்லவர், ''ஆயனரே! உம் புதல்வி சிவகாமியின் நாட்டியக் கலைத் திறமையின் புகழானது நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவி வாதாபிச் சக்கரவர்த்தியின் காதுவரையில் எட்டியிருக்கிறது. இதோ இன்று நம் அருமைச் சிநேகிதராக வீற்றிருக்கும் சத்யாச்ரய புலிகேசி முன்னர் சிவகாமியின் நடனத்தைப் பார்க்க விரும்புகிறார். அதற்காகவே உங்களை இவ்வளவு அவசரமாகக் கூட்டி வரச் செய்தேன். சிவகாமியினால் இப்போது உடனே நடனம் ஆட முடியுமா? உம்முடைய விருப்பம் என்ன?'' என்று வினவியபோது, ஆயனர், ''மகாப் பிரபு! தங்களுடைய கட்டளை எதுவோ,

அதுதான் என்னுடைய விருப்பம். சிவகாமிக்கு, அவளுடைய கலைத் திறமையைக் காட்டுவதற்கு இதைக் காட்டிலும் சிறந்த சபையும் சந்தர்ப்பமும் எங்கே கிடைக்கப் போகிறது? இரண்டு மாபெரும் சக்கரவர்த்திகளும் இரண்டு சூரியர்களைப் போலவும் இரண்டு தேவேந்திரர்களைப் போலவும் ஏக காலத்தில் கூடியிருக்கிறீர்கள் !'' என்று சொல்லிவிட்டுச் சிவகாமியை நோக்கினார்.

முதலில் மகேந்திர பல்லவர் பேசிய போது, சிவகாமி சிறிது தலை நிமிர்ந்து அரைக் கண்ணால் வாதாபிச் சக்கரவர்த்தியைப் பார்த்தாள். பிறகு, அவளுடைய கண்கள் கட்டுக் காவலை உடைத்துக் கொண்டு இரண்டு சக்கரவர்த்திகளின் சிம்மாசனங்களையும் சுற்றிச் சிறிது தூரத்துக்கு வட்டமிட்டன. ஆனால் அவை அடைந்தது ஏமாற்றந்தான். சிவகாமியின் கண்கள் தேடிய வீர சௌந்தரிய வதனம் அங்கே தென்படவில்லை. ''ஆ! அவர் எங்கே? ஏன் சக்கரவர்த்திக்கு அருகில் அவர் காணப்படவில்லை?'' என்று அவளுடைய உள்ளம் பதைபதைத்தது. சில கண நேரத்துக்குள் பற்பல எண்ணங்கள் மின்னலைப் போல் தோன்றி மறைந்தன. ஏதாவது அவருக்கு விபத்து நேர்ந்திருக்குமோ? இராது, இராது. அப்படி இருந்தால், மகேந்திர பல்லவர் இந்த வைபவத்தை நடத்துவாரா ?



'' மிக்க சந்தோஷம், ஆயனரே ! அதோ வாத்தியக் கோஷ்டியும் ஆயத்தமாக இருக்கிறது. உங்களுக்காகவே இந்தச் சபையை இவ்வளவு நேரம் வளர்த்திக் கொண்டிருந்தோம்!'' என்றார் மகேந்திர பல்லவர்.

சிவகாமி தான் நின்ற இடத்திலிருந்து நடன வட்டத்துக்குப் போகத் திரும்பியபோது, மீண்டும் அவளுடைய கண்கள் ஒரு முறை சுற்றிச் சுழன்றன. அப்போது அவளுடைய பார்வை தற்செயலாகப் புலிகேசியின் முகத்தில் விழுந்தது. வெறித்து நோக்கிய புலிகேசியின் கொடுங் கண்களைச் சந்தித்த போது, திடீரென்று வீசிய வாடைக் காற்றில் அடிபட்ட மல்லிகைக் கொடியைப் போல் அவளுடைய உள்ளம், உடம்பு எல்லாம் சில்லிட்டு நடுநடுங்கின. இது ஒரு விநாடி நேரந்தான். அகாரணமாகத் தோன்றிய அந்த உணர்ச்சியை எப்படியோ சிவகாமி சமாளித்துக் கொண்டு நடன வட்டத்தை நோக்கி நடந்தாள். அப்போது இன்னதென்று சொல்ல முடியாத அருவமான நிழல் போன்ற ஞாபகம் ஒன்று அவளைப் பின்தொடர்ந்து சென்றது.

நடன வட்டத்தில் சென்று நின்றதும் சிவகாமி மேற்கூறிய நிழல் ஞாபகத்தை உதறித் தள்ளிவிட்டு ஆட்டத்துக்கு ஆயத்தமானாள். அப்போது அவள் தன்னடக்கத்துக்குப் பங்கம் இல்லாமல் அந்த மகாசபையின் நாற்புறத்திலும் கண்ணைச் சுழற்றிப் பார்த்தல் சாத்தியமாக இருந்தது. மண்டபத்தின் மேல் மச்சு மாடங்களிலே சக்கரவர்த்தினியும் மற்ற அந்தப்புரத்து மாதர்களும் வீற்றிருப்பது அவள் பார்வைக்குப் புலனாயிற்று. முன்னொரு நாள் அதே மண்டபத்தில் நடந்த அரங்கேற்றத்தின்போது இன்றுபோலவே மாமல்லரைக் காணாமல் முதலில் தான் ஏமாற்றம் அடைந்ததும், பிற்பாடு அவர் தாய்மார்களுடனே மேல்மாடத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்ததாகத் தெரியப்படுத்தியதும் நினைவு வந்தன. இன்றைக்கும் அவர் அவ்வாறே தன் கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு மறைவான இடத்திலிருந்து தன்னுடைய நடனத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. இந்த எண்ணம் ஏற்பட்டதும், இதற்குமுன் அவளுக்கு ஏற்பட்டிருந்த ஏமாற்றம், சோர்வு, மனக்கலக்கம், நடுக்கம் எல்லாம் மாயமாய் மறைந்து போயின. நடனமும் உடனே ஆரம்பமாயிற்று.

# 23% வட்டி அளிப்பது

ஐஓபியின் இணையற்ற

# இரட்டை சேமிப்புத் திட்டம்

விரும்பியதைத் தேர்ந்தெடுங்கள்!

| டெபாஸிட் காலம் (மாதங்கள்) | ஆண்டுக்கு வட்டி சதவிகிதம் (ஏறக்குறைய) |
|---|---|
| 181 ... | 23 |
| 157 ... | 20.5 |
| 121 ... | 17 |
| 85 ... | 14.5 |
| 62 ... | 13 |
| 37 ... | 10.3 |

அருகிலுள்ள ஐஓபி கிளையில் விசாரியுங்கள்

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்



நடனம் ஆரம்பமாகிச் சிறிது நேரத்துக்கெல்லாம் அச்சபையில் இருந்தவர்கள் எல்லாம், அது ஓர் இராஜசபை என்பதையும், அதில் ஒரு பெண் நடனமாடுகிருள் என்பதையும், தாங்கள் அங்கேயிருந்து அதைப் பார்க்கிறோம் என்பதையும் மறந்தே போனார்கள். இந்த ஜட உலகத்தையே விட்டு விட்டு அனைவரும் ஒரு புதிய ஆனந்தக் கனவுலகத்துக்கே போய் விட்டார்கள்.

* * *

நடனம் ஆரம்பமாகும் சமயத்தில் சிவகாமி தெளிந்த தன்னுணர்ச்சி பெற்றிருந்தாள். தன் வாழ்க்கையிலேயே அது ஒரு முக்கியமான தினம் என்றும், அன்று தான் ஆடப் போகும் நடனம் தன் வாழ்க்கையில் ஒரு முக்கிய சம்பவம் என்றும் உணர்ந்திருந்தாள்.

கன்னி சிவகாமியின் உள்ளத்தில் அலைமோதிக் கொண்டிருந்த இரு பேருணர்ச்சிகளில் ஒன்று மாமல்லர் மேல் கொண்ட காதல் என்பதையும், இன்னொன்று நடனக் கலைமீது அவளுக்கு இருந்த பிரேமை என்பதையும் முன்னமே பார்த்திருக்கிறோம்.

இப்போது இங்கே கூடியிருப்பது போன்ற ஒரு மகா சபை தனது கலைத் திறமையைக் காட்டுவதற்குக் கிடைப்பது மிகவும் அரிது என்பதை ஆயனரைப் போல் அவளும் உணர்ந்திருந்தாள்.

அன்றியும் சிவகாமிக்குத் தன்னுடைய கலைத் திறமை முழுவதையும் அந்தச் சபையில் காட்ட வேண்டும் என்ற ஊக்கம் ஏற்படுவதற்கு இன்னொரு முக்கிய காரணமும் இருந்தது.

மகேந்திர பல்லவர் மற்ற விஷயங்களில் எவ்வளவு கடின சித்தராயிருந்த போதிலும், கலைகளுக்கு மனம் உருகக் கூடியவர். தன் கலைத்திறமையினால் அவருடைய நன்மதிப்பைக் கவர வேண்டும்; தான் மாமல்லரை மணந்துகொள்வதற்கு அவர் தடை சொல்லாதபடி செய்ய வேண்டும். வைர நெஞ்சம் உள்ள ஒரு மகா சக்கரவர்த்தியின் மனத்தை மாற்றித் தன் விருப்பத்துக்கு இணங்கும்படி செய்வதற்குத் தன்னிடம் உள்ள ஒரே ஆயுதம் நடனக் கலையே அல்லவா?

எனவே, அன்றைக்குத் தன்னுடைய நடனம் பரதநாட்டியத்தின் சரித்திரத்திலேயே ஓர் அற்புத சம்பவமாயிருக்க வேண்டும் என்று சிவகாமி சங்கற்பம் செய்து கொண்டாள்.

ஆனால், இத்தகைய தன்னுணர்ச்சியெல்லாம், சிவகாமி ஆட்டத்தைத் தொடங்கும் வரையிலேதான் இருந்தது. ஆட்டம் ஆரம்பமாயிற்றோ, இல்லையோ, இத்தனை காலமும் சிவகாமியின் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த கலை உணர்ச்சியானது பொங்கிப் பெருகத் தொடங்கியது. சிவகாமி தான் என்னும் உணர்ச்சி அற்றுக் கலை வடிவமாகவே மாறி விட்டாள்.

பின்னர் சிவகாமி நடனம் ஆடவில்லை. நடனக் கலையானது அவளை ஆட்கொண்டு ஆட்டுவித்தது.

சிவகாமியின் உள்ளமானது நாட்டியக் கலையின் அம்சங்களாகிற தாளங்களையும், ஜதிகளையும், அடைவுகளையும், தீர்மானங்களையும் பற்றி எண்ணவில்லை. அந்தத் தாளங்கள், ஜதிகள்



அடைவுகள், தீர்மானங்கள் எல்லாம், அவை அவை அந்தந்த இடத்தில் ஓடி வந்து சிவகாமிக்குச் சேவை செய்தன.

சிவகாமியின் உள்ளம் ஆனந்தவெளியிலே மிதந்து கொண்டிருந்தது. அவளுடைய தேகமோ எல்லையற்ற ஆனந்த வெள்ளத்தில் அநாயாசமாக மிதந்து கொண்டிருந்தது.

பார்த்துக் கொண்டிருந்த சபையோர்களும் ஆனந்த சாகரத்தில் மிதக்கலாயினர். பரதநாட்டிய வினிகையில் முதற் பகுதியான 'நிருத்தம்' முடி

வடைந்த போதுதான் சபையோர் தாங்கள் சஞ்சரித்த ஆனந்தக் கனவு லோகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்தனர்.

அப்போது சபையின் நாலுபுறங்களிலிருந்தும் பிரமாதமான கரகோஷம் எழுந்தது. அவ்விதம் கரகோஷம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தவர்கள் இரு சக்கரவர்த்திகளுங் கூடத்தான்.

* * *

நடனம் ஆரம்பிப்பதற்கு முன்னால், சிவகாமியும் ஆயனரும் மகேந்திர சக்கரவர்த்தியிடம் கட்டளை பெற்றுக் கொண்டு நடன வட்டத்தை நோக்கிச்



சென்று கொண்டிருந்தபோது, வாதாபி மன்னர் மகேந்திர பல்லவரைப் பார்த்து, "இதென்ன? இவர்களுக்கு இவ்வளவு மரியாதை செய்கிறீர்களே? எங்கள் நாட்டிலே சாட்டையினால் அடித்து நடனம் ஆடச் சொல்வோம்" என்றார்.

"சத்யாச்ரயா! எங்கள் நாட்டில் அப்படியில்லை. இங்கே கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் நாங்கள் மிக்க மரியாதை செய்கிறோம். இராஜ்யம் ஆளும் மன்னர்களையும் சக்கரவர்த்திகளையும் போலவே கலை உலகிலும் இங்கே அரசர்களும் சக்கரவர்த்திகளும் உண்டு. 'சிற்பச் சக்கரவர்த்தி', 'கவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டங்கள் அளிக்கிறோம். ஆயனர் 'சிற்பச் சக்கரவர்த்தி' என்ற பட்டம் பெற்றவர். இராஜ்யம் ஆளும் சக்கரவர்த்திகளுக்குச் செய்யும் மரியாதையை மக்கள் இவருக்கும் செய்கிறார்கள்" என்றார்.

"அழகாய்த்தானிருக்கிறது, உங்கள் நாட்டின் வழக்கம்!" என்று பரிகசித்தார் வாதாபி மன்னர்.

சிவகாமியின் நிருத்தம் முடிந்தவுடனே வாதாபிச் சக்கரவர்த்தியும் மற்றவர்களைப் போல் கரகோஷத்தில் ஈடுபட்டதைக் கண்ட மகேந்திர பல்லவர், "இப்போது என்ன சொல்கிறீர்கள்? கலைஞர்களுக்கு மரியாதை செய்வதுபற்றி உங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டீர்களா?" என்று கேட்டார்.

"நடனம் அற்புதமாய்த்தான் இருக்கிறது. இம்மாதிரி நான் பார்த்ததே இல்லை. ஆனாலும்...." என்று கூறி இடையில் நிறுத்திவிட்டுப் புலிகேசி ஏதோ யோசனையில் ஆழ்ந்தார்.

அன்று அபிநயத்துக்குச் சிவகாமி முதன் முதலாக எடுத்துக் கொண்ட பாடல் செந்தமிழ் நாட்டின் அதி தேவதையான வேலனைப் பற்றியது. இந்தக் காலத்தில் 'ஆனந்த பைரவி' என்று வழங்கும் பழைமையான ராகத்தில், நடனத்துக்கும் அபிநயத்துக்கும் ஏற்ற தாளத்துடன் அமைந்த பாடல் பின்வருமாறு:

மறவேன் மறவேனென்று வேலின்மேல் ஆணையிட்ட
  மன்னரும் மறப்பாரோ — நீல மயிலே!

உருகிஉருகி உள்ளம் அவரை நினைவதையும்
  உயிரும் கரைவதையும் — அறியாரோ மயிலே

அன்பர் வரவுநோக்கி இங்குநான் காத்திருக்க
  அன்ன நடை பயில்வாயோ — வண்ண மயிலே!

பெம்மான் உன்மேலே வரும்பெருமிதம் நினைக்கேறிப்
  பாதையை மறந்தாரோ — பேதை மயிலே!

வன்மம் மனத்திற்கொண்டு வஞ்சம் தீர்க்க நினைத்து
  வழியில் உறங்கினரோ — வாழி நீ மயிலே!

தன்னிகரில்லாதான் தனயர்பால் மையல் கொண்ட
  மங்கையை இரங்காரோ — தங்க மயிலே!

சொன்னாலும் நீ அறியாய் சொந்த அறிவுமில்லாய்
  உன்னை நொந் தாவதென்ன?—வன்கண் மயிலே!

மன்னும் கரிபரிகள் புவியில் பல இருக்க
  உன்னை ஊர்தியாக் கொண்டார் — தன்னையே
            நோகவேணும்

(தொடரும்)

# என் மகன்





சுஜாதாவின் என் மகன் என்ற இப் படத்துக்குப் பெயர்ப் பொருத்தம் சரியில்லை. திருடன், திருடனுக்குத் திருடன், பக்காத் திருடன் என்று இப்படிப் பலதரப்பட்ட திருடர்களின் வாழ்க்கையை விவரிக்கிறது இப் படம்.

திருடனை நேர்மையாளராக வாழ்ந்துவரும் ஒருவர் தம் மகனாக ஸ்வீகாரம் செய்து கொள்கிறார். அவர் அன்பிலே அந்தத் திருடன் நல்லவனாக விரும்புகிறான். ஆனால் சூழ்நிலை அவனை அதற்கு அனுமதிக்கவில்லை.

கதை தமிழ் நாட்டுச் சரக்குமல்ல. போசமான் என்ற இந்திப் படக் கதையின் தழுவல். தங்கப் பதக்கத்தில் இன்ஸ்பெக்டர் சௌதிரி கடமையே மூச்சாக வாழும் பாத்திரம். இதில் ஏட் ராமையாத் தேவர் கடமைக் காகவே உயிர் விடும் கான்ஸ்டபிள். அவர் தத்து எடுத்துக் கொள்ளும் திருடன் ராஜாவாகவும் சிவாஜி கணேசனே நடிக்கிறார். ஆனால் 'ஏட்' ராமையாத் தேவர் பாத்திரத்தின் அழுத்தமும் அழகும் கம்பீரமும் கனிவும் ஏனோ ராஜா பாத்திரத்தில் காண முடியவில்லை. கடமை, பாசம், கண்டிப்பு போன்ற கஷ்டமான பாவங்களை வெகு சரளமாக, அனாயாசமாகச் சித்திரித்துக் காட்ட சிவாஜியால்தான் முடியும். அந்த மாதிரி அழுத்தமான பாத்திரங்களில்தான் அவர் சோபிக்கவும் செய்கிறார்.

மஞ்சுளாவின் நடிப்பில் மெருகேறியிருக்கிறது.

படத்தில் நகைச்சுவைக்கு இடமில்லை. ஒட்ட வைக்கப் பட்டுள்ள மனோரமா, வி. கே. ராமசாமி காட்சிகள் எடுபடாவிட்டாலும் அவர்கள் தோன்றும்போது கல கலப்பு ஏற்படுகிறது. சண்டைக் காட்சிகளையும் தாராள மாகவே சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

சுந்தரராஜன், வி.எஸ். ராகவன், பாலாஜி, மனோகர் வழக்கம் போல!.... ஒளி, ஒலிப்பதிவும், வண்ணங் களும், பாராட்டுப் பெறுகின்றன.

ஏட் ராமையாத் தேவரின் பாத்திரமும் சிவாஜியின் இரட்டை வேடமும் ரசிகர்களைக் கவரும். —கௌசிகன்

# 36 மணி நேரம்



திகிலில் தொடங்கித் திகிலில் வளர்ந்து திகிலில் முடியும் கதை ''முப்பத்தாறு மணி நேரம்''. முப்பத்தாறு மணி நேரமும் இரண்டரை மணிக்குள் முடிகிறது.

திகிலை உண்டுபண்ணுபவர்கள் ஒரு பாங்கைச் சூறை யாடிவிட்டுத் தலைமறைவாகிவிட்ட மூன்று பேரும் கொள்ளையர்கள். பத்திரிகை ஆசிரியர் ஒருவரின் வீட்டில் ஒளிந்துகொண்டு அவர்கள் அந்த வீட்டுச் சிறுவன் முதற்கொண்டு பெரியவர்கள் வரை அனைவரையும் படுத்தி வைக்கும் பாடு! எந்த நேரம் என்ன நேருமோ என்று அஞ்ச வைக்கிறது. ஆனால் வசனங்கள் அஞ்சேல் என்று அபயம் அளித்து அத்தனை அச்சத்தையும் போக்கித் திகிலைத் தணித்து விடுகின்றன.

இந்தப் படத்தைப் பற்றி இன்னொரு திகில் தரும் செய்தி: கதை ஒரு 'டெஸ்பரேட்' திருட்டு! ஆம், 'தி டெஸ்பரேட் அவர்ஸ்' என்ற ஆங்கிலப் படத்தின் தழுவல். ஆங்கிலக் கதையில் இல்லாத குடும்பப் பாசம், காதல் உணர்வு ஆகியவற்றைக் கோத் திருக்கிறார்கள். அதனால் எஸ்ப்ரஸோ காப்பி சாதா காப்பியாகி விட்டது.

வழக்கத்துக்கு மாறாக விரசம் குறைவுதான். ராஜ்குமாரும் மாலா சின்ஹாவும் தாங்கள் ஏற்ற பாத்திரத்தைத் திறம்பட வகித்திருக்கிறார்கள். சுநீல் தத்தும் ரஞ்சித்தும் தங்களுக்கு நல்ல பெயர் தேடிக்கொள்ள முயன்றிருக்கிறார்கள். ஆனால் டானி அசட்டுச் சிரிப்பு, சிரித்து, நடிப்பை மறந்து தாம் ஏற்ற பாத்திரத்தை அர்த்தப் பிசகாக்கி விடுகிறார். - ரா. வீ.

Prestige

PREETT

# பத்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்—இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர் குக்கர்

**காரணம் என்ன?**

**அதிகக் கொள்ளளவு:**

பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால் அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது. உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

**அதி வேகம்:**

பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

**அதிக பாதுகாப்பானது:**

மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிடியுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது. வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.

உங்கள் பிரஸ்டீஜ் குக்கர் அதி நுட்பமானது. சிறந்த பயிற்சி பெற்ற பழுதுபார்ப்போர் தான் அதை சீராக்க முடியும். விற்பனைக்குப் பிறகும் உங்கள் பிரஸ்டீஜுக்கு விரைவாகவும் தரமாகவும் சேர்பணி புரிய, நாடெங்கும் 250க்கும் அதிகமான ஸர்வீஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. பிரஸ்டீஜ்-ப்ரீத் பணி நிலையங்களிலும், விற்பனையாளர்களிடமும், மட்டுமே உத்திரவாதமுள்ள மாற்றுப் பகுதிகள் கிடைக்கின்றன.






Prestige

PREETT

டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 560016

SAA/TTP/1008 R.

**இல்லத்தரசிகளே!**

சரியான அளவுகளைத் தெரிந்துகொள்ள உபயோகியுங்கள்

**PREETT ப்ரீத் ஸ்டாண்டர்ட் அளவிடும் கப் மற்றும் ஸ்பூன்கள்**

ஹோம் சயின்ஸ் அசோசியேஷன் ஆஃப் இந்தியாவின் அங்கீகாரம் பெற்றவை. திரவ-திடபதார்த்தங்களை இனி கண் மதிப்பில் அளவிட வேண்டியதில்லை.
எல்லா பிரபல விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.



# அண்ணாமலைக்கு அரோஹரா!



அரி அயன் அடிமுடி தேட அவர்களுக்கு அகப்படாத அருட்சோதிப் பிழம்பாக அரனார் நின்று, பிறகு அண்ணாமலையாகக் குளிர்ந்து உறைந்தார் என்ற விருத்தாந்தத்தை அறியாதார் இல்லை. லக்ஷ்மீபதியான திருமால் செல்வப் பெருமையைக் குறிக்கிறார்; சரஸ்வதீ காந்தனான பிரம்மா கல்விப் பெருமையைக் காட்டுகிறார். இறைத் தத்துவத்தைப் பணத்தாலோ புத்தியாலோ பிடிக்க முடியாது. அது அன்பெனும் பிடிக்குள் அடங்கும் மலை என்பதையே அண்ணாமலையார் நிரூபிக்கிறார்.

இருபத்தைந்து ஏக்கர் நிலப் பரப்பில், இந்தியாவிலேயே உயரமாகக் கருதப்படும் 217 அடி ராஜகோபுரம் உள்பட ஒன்பது கோபுரங்கள் கொண்ட விஸ்தாரமான ஆலயத்தில் அண்ணாமலையார், அனைவரும் அணுகும் அண்ணும்மலையாக, அன்னை அபீதகுசாம்பிகையுடன் எழுந்தருளியிருக்கிறார்.

அருணகிரிநாதர் பிறந்தது இந்த அருணாசலத்தில்தான். ரமண பகவான், சேஷாத்திரி ஸ்வாமிகள், தெய்வசிகாமணி தேசிகர், குரு நமசிவாயர், குகை நமசிவாயர், ஈசான்ய ஞான தேசிகர், ஈசுவர ஸ்வாமிகள், சிவப்பிரகாச ஸ்வாமிகள் போன்ற பல "ஞானத் தபோதனரை வாவென்று அழைத்த மலை" இவ்வண்ணாமலை. திரு ஆரூரில் பிறந்தாலும், காசியில் இறந்தாலும், தில்லையில் தரிசித்தாலும், அண்ணாமலையை நினைத்தாலும் முக்தி என்பது ஆன்றோர் வழக்கு. இவற்றுள் அண்ணாமலையை நினைப்பதே மிக மிக எளிய வழி அல்லவா? ஆனால் அது உன் நினைப்பாக இருந்துவிட்டாலோ, அது ஒன்றே அதன்பின் சதாகால ஸ்மரணையாகிவிடும்.

பைம்பொனே, பவளக்குன்றே,
　　பரமனே, பால் வெண்ணீற்றாய்
செம்பொனே, மலர்செப்பாதா,
　　சீர்தருமணியே, மிக்க
அம்பொனே கொழித்து
　　வீழும் அணி அண்ணாமலையுளானே!
என்பொனே, உன்னையல்லால்
　　ஏது நான் நினைவிலேனே!

என்று அப்பர் பாடியபடி அவன் நினைப்பிலேயே அடியாரை ஊறச் செய்துவிடுவார் அருணாசலேசுவரர்.

தமிழகத்தின் பக்தி எத்தனை பெரியது, கலைத் திறன் எத்தனை பெரியது என்று உலகறியக் காட்டும் மாபெரும் இத்திருக்கோயிலுக்கு இப்போது திருப்பணி நடந்து வருகிறது. விரிந்து வானோங்கி நிற்கும் இவ்வாலயத்தை முற்றிலும் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கும்பாபிஷேகம் செய்ய ஐம்பது லட்சம் ரூபாய் செலவாகும். அரைக் கோடியா என்று மலைக்க வேண்டியதில்லை, பக்த கோடிகள் உள்ளமட்டும். "ஏழைக்கு இரங்கு மலை,' ஏதேது கேட்டாலும் கோழைபடாமல் கொடுக்குமலை" என்று புகழ்பெற்ற அண்ணாமலைக்கு இன்று ஏழையிலிருந்து ஒவ்வொருவரும் தன் சக்தியானுசாரம் கொடுக்கிற பெரும் பேறு கிட்டியிருக்கிறது. பொருளாளர், அருள்மிகு அருணாசலேசுவரர் தேவஸ்தானத் திருப்பணிக் குழு, திருவண்ணாமலை, வடார்க்காடு மாவட்டம் என்ற முகவரிக்கு அன்பர்கள் தமது திரவிய காணிக்கையை அனுப்பக் கோருகிறோம்.

திருப்பணிக்கு உதவ காந்தி ஜயந்தியான அக்டோபர் 2ந் தேதியன்று திருவண்ணாமலையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசை நடக்கிறது. இதில் கலந்து கொண்டால் அண்ணாமலையாரின் புகழைக் கேட்டு உருகிக் கொண்டே அவர் தம் பணிக்குக் கைங்கரியமும் செய்து இரட்டிப்பு லாபம் பெறலாம்.

அண்ணாமலையெம் அண்ணா போற்றி!
கண்ணார் அமுதக் கடலே போற்றி!

# எங்கப்பா ஒரு எக்ஸெண்ட்ரிக்!

ஜானகிமணாளன்



சம்பளத்தை வாங்கிக் கொண்டு ஆபீஸை விட்டு வெளியே வந்த நான், நேராக எதிர்ச் சாரியில் உள்ள பஸ் ஸ்டாப்பை அடைந்தேன். வழக்கமாகச் சம்பளத் தினத்தன்று எனக்கு முன்பே அங்கு வந்து காத்துக் கொண்டிருக்கும் என் அப்பா இன்று ஏன் இன்னும் வரவில்லை?

சென்ற மாதம் இதே சம்பளத் தேதியன்று தான் அவரிடத்தில் அந்த விஷயத்தைப் பிரஸ்தாபித்தேன். அதற்குப் பின் வரிசையாக நடைபெற்ற நிகழ்ச்சிகள் எல்லாம் என் மனத் திரையில் ஓடத் தொடங்கின. இடையிடையே 'ஃப்ளாஷ் பாக்' ஆக என் குடும்பத்தின் ஆரம்ப காலக் கட்டங்களும் தோன்றத் தவறவில்லை.

எங்கப்பா ஒரு எக்ஸெண்ட்ரிக்!

ஒருவரிடம் பேசியது போல் அடுத்தவரிடம் பேச மாட்டார். இப்போது இருப்பதுபோல் அடுத்த நிமிடம் இருக்க மாட்டார். க்ஷண சித்தம், க்ஷண பித்தம். அவரோடு இருந்து குடும்பம் நடத்துவதே கடினம். தொட்டதற்கெல்லாம் பிடிவாதம்; வாக்குவாதம்.

அம்மா ஒரு 'சாஃப்ட்' டைப்பாக இருப்பதால் ஓரளவு குடும்பம் நடக்கிறது. அவருடைய சம்பளம் குடும்பம் நடத்துவதற்கே







பொருது. இந்த நிலையில் கொஞ்சம் 'ஷோக்' பேர்வழி வேறு.

'ரிடையர்' ஆவதற்கு இன்னும் ஒருசில ஆண்டுகளே இருக்கும் இந்த நிலையில்கூட, அவருடைய நடையுடை பாவனைகள் வயதுக்குப் பொருந்தாததாகவே இருக்கும். டைட் பேண்ட், ஜூஸ் ஷர்ட், லாங் ஹேர் ஸ்டைல். இதுதான் அவருடைய தற்போதைய கோலம்.

ஒரு சினிமா, நாடகம் பாக்கி கிடையாது. அத்தனைக்கும் முதல் ஷோவுக்கே ஆஜராகி விடுவார். சமுதாயத்தால் 'கெட்ட பழக்கங்கள்' எனக் கூறப்படும் அத்தனையும் அவரிடம் உண்டு. பெண்கள் விஷயத்தில் கொஞ்சம் 'பச்சை'. அம்மாவிடம் எப்படி எரிந்து விழுகிறாரோ, அதற்கு நேர் விரோதம் மற்றப் பெண்களிடம். இவருடைய 'பர்ஸனாலிடி'க்கு எந்தப் பெண்ணும் இரண்டாம் முறை இவரைத் திரும்பிப் பார்க்காமல் போக மாட்டாள். இதைச் சாதகமாக்கிக் கொண்டு சிலரைத் தம் வலையில் இழுத்துக் கொள்ளத் தவற மாட்டார். தமக்கு ஒத்து வராத பெண்களைத் தூற்றுவதிலும் இவர் சமர்த்தர்.

மாலை நேரங்களிலும், விடுமுறை நாட்களிலும் 'டக்'காக டிரஸ் செய்துகொண்டு 'ஈவினிங் வாக்' என்றபெயரில் பஸ் ஸ்டாண்ட், கடைத் தெரு, தியேட்டர், பெண்கள் பள்ளி போன்ற இடங்களுக்கெல்லாம் சென்று வருவது இவரது பொழுதுபோக்கு.

மிகவும் நெருங்கியவர்களிடம் இது பற்றி இவர் சொல்லுவாராம் :

'வாழ்க்கை அநித்தியம் தானே? இருக்கும் வரையில் 'ஜாலி'யாக இருந்து விட்டுப் போக வேண்டியதுதானே... அழகைப் பார்த்து ரசிப்பதில் என்ன ஸார் தப்பு? தவிரவும் இன்று நாட்டில் எந்தப் பெண் 'தன் கணவனுக்காக மட்டும்' என்று தன்னை அழகுபடுத்திக் கொள்கிறாள்? அப்படிச் செய்து கொண்டால் அவள்வீட்டுக்குஉள்ளேஅல்லவாசெய்து கொள்ள வேண்டும்! அரையும் குறையுமாக இப்படி டிரஸ் செய்து கொண்டு — அதுவும் கணவனுடனேயே வெளியில் பவனி வந்தால் அதற்கு என்ன ஸார் பொருள்? 'மற்றவர் தன் அழகைப் பார்க்க வேண்டும்' என்பதற்காகத்தானே ஸார் இருக்க வேண்டும்? அந்த மற்றவர்களில் ஏன் நாமும் ஒருவராக இருக்கக் கூடாது? இதில் என்ன ஸார் தப்பு இருக்கிறது?' — என்று பிரசங்கமே செய்வாராம்.

மற்றவரில் அவர் ஒருவராக இருக்கட்டும். ஆனால் அதற்கு ஒரு வயதுவரம்பு கிடையாதா? மலையைப் போல் கல்யாண வயதைத் தாண்டிய பெண் நான் ஒருத்தி இருக்கும்போது, ஊரில் உள்ள சிறுகளை 'சைட்' அடித்துக் கொண்டிருந்தால் அது நன்றாகவா இருக்கிறது? ஊரில் எல்லோரும் இவரைப் பற்றி இப்படித்தான் பேசிக் கொள்ளுகிறார்கள்... அதோடு இவருக்கு மற்றொரு விதத்தில் கெட்ட பெயரும் உண்டு. காலம் கடந்த காலத்தில் 'குஷி'யாக இருப்பதற்குக் காலத்தோடு செய்து வைக்க வேண்டிய மகளின் திருமணத்தைப் பற்றிச் சிறிதும் சிந்திக்காமல் இருக்கிறாரே! அதுமட்டுமின்றி அவளுடைய உழைப்பை உறிஞ்சி, அந்த ஆதாயத்தில் தன் ஆடம்பர வாழ்க்கையை நடத்துவதாக எல்லோரும் பேசிக் கொள்வது என் காதில் விழுகிறது.

என் அப்பாவின் காதிலும் அது விழுந்திருக்கலாம். அதைப் பற்றி அவருக்கு அக்கறை இல்லை. அதைப் பற்றி அவரிடம் நேரில் போய் யாரும் எதையும் சொல்ல மாட்டார்கள். ஏன்? அவரிடம் பயம்.

ஏனெனில் எங்கப்பா ஒரு எக்ஸென்ட்ரிக்!

தாறுமாறாகப் பேசி வந்தவரைப் பகைத்துக் கொண்டு விடுவார். ஆகவே இவரது பகைமையை விரும்பாத எல்லோரும், 'இவர் சொல்வது சரி, செய்வது சரி' என்று தலையாட்டிவிட்டுப் போய்விடுவார்கள். இவர் இன்னும் குஷியடைந்து விடுவார்.



நடுத்தரக் குடும்பப் பெண்கள் படித்து விட்டு வேலைக்குப் போவது ஏன்? வேலைக்குப் போய்க் கொஞ்சம் பணத்தைச் சேர்த்துக் கொண்டு ஒரு நல்ல கணவனை அடையத் தானே?

சம்பாதிக்கும் பெண்ணாக இருந்தால்கூட, வாங்கும் 'எதிர் ஜாமீன்' தொகையை வாங்காமல் விட்டுவிடும் பிள்ளை வீட்டுக்காரர் எத்தனை பேர் இருக்கிறார்கள் இன்று இந்த நாட்டிலே?

ஆனால் என் அப்பாவுக்கு அந்தக் கவலையெல்லாம் கிடையாது. ஏனெனில் தனக்குத் திருமண வயதைத் தாண்டிய ஒரு பெண் இருப்பதாகவே அவருக்கு நினைவு கிடையாது.

விலையாக வேண்டிய காலத்தில் விலையாகாமல், உழைத்து உழைத்து ஓடாகிப் போனவிழுந்து நிற்கும் எனக்குத் திருமணம் செய்து வைப்பது யார்? நான் சிந்திக்கத் தொடங்கினேன்.

என் அப்பாவை நம்பினால் இனி இந்த ஜன்மத்தில் எனக்குத் திருமணமில்லை. அதற்காகப் பெற்றோரை உதறிவிட்டுத் தனியே ஒருவரைத் திருமணம் செய்து கொண்டு ஓடிவிட முடியுமா? அது உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருப்பவர் செய்யும் செயலல்லவா? என்னுடைய மனப்பாங்கு அதற்கு இடம் தரவில்லை.

என் வாழ்க்கையும் நன்கு அமைய வேண்டும். அதே நேரத்தில் என் அப்பாவுக்கும் அதில் பங்கு இருக்க வேண்டும். அதைச் செய்வது எப்படி? நானே சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தேன்.

என்னுடைய ஆபீஸ் மானேஜர் மனைவியை இழந்தவர். பாவம்... இரண்டு பெண் குழந்தைகளை வைத்துக் கொண்டு மிகவும் திண்டாடிக் கொண்டிருப்பவர்.

எனக்குத் திடீரென்று ஒரு விபரீதமான யோசனை தோன்றியது. 'அவரை நாம் மணந்தால் என்ன? நமக்கு உற்ற துணை கிடைப்பதோடு, அந்தத் தாயில்லாப் பெண்களுக்கும் ஒரு தாயாக நாம் இருக்கலாமே!'

ஆனால் 'ஏகபத்தினி' விரதனாக இருக்கும் அவர் மனத்தை எப்படி மாற்றுவது? அவர் சம்மதிப்பாரா?

ஒரு பெண், ஓர் ஆணை அணுகி, 'என்னைத் திருமணம் செய்து கொள்ளுங்கள் — அதிலும் பணம் காசு இன்றி' — என்று எப்படிக் கேட்பது?

பெற்றோர் இனி நமக்குத் திருமணம் செய்து வைக்க மாட்டார்கள் என்ற நிலையில் யாரோ ஒருவனுடன் ஓடித் தனக்கும் பெற்றோருக்கும் கெட்ட பெயரை உண்டாக்கிக் கொண்டு, ஊரார் முன் அவமானப்படுவதை விட, ஓர் ஆணிடம் உண்மை நிலையை ஒளிக்காமல் எடுத்துக் கூறி, கெஞ்சிக் கேட்டு, அப்படியும் அவர் மறுத்துக் கூறி, அவரிடம் அவமானப் படுவது எவ்வளவோ மேல் இல்லையா?

இந்த முடிவோடு ஒரு நாள் — ஞாயிற்றுக் கிழமை — நானே வலிய அவர் வீட்டுக்குச் சென்றேன். பெண் குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடினேன்.

ஆபீஸ் விஷயங்களில் பேச்சை ஆரம்பித்து அவருடைய குடும்ப நிலையை விசாரித்தேன். குழந்தைகளின் நிலையை எடுத்துக் கூறி யோசனை கூறுவது போல் 'திருமணம் செய்து கொண்டால் என்ன?' என்றேன்.

'குழந்தைகளை உள்ளன்போடு வளர்க்கும் மாற்றுத் தாயைத் தேடி அலைந்து ஏமாந்து போவதை விடத் தம்முடைய தற்போதைய நிலை எவ்வளவோ மேல்' எனக் கூறினார்.

இந்த நிலையில் பேச்சை என் பக்கமாகத் திருப்பி என்னுடைய குடும்ப நிலையையும் என்னுடைய தனிப்பட்ட துயரச் சூழ்நிலையையும் எடுத்துக் கூறினேன். அவர் நிலையோடு என் நிலையை ஒப்பிட்டுப் பேசினேன். 'என்னை மணப்பது தவறு அல்ல' என எடுத்துக் கூறினேன். ஆனால் அவர் மசிவதாக இல்லை.

மீண்டும் மீண்டும் போனேன்.

பேசியதையே திரும்பத் திரும்பப் பேசினேன்.

இதற்குள் குழந்தைகளுக்கு என்னிடம் ஒரு பிடிப்பை ஏற்படுத்திக் கொண்டேன். முடிவில் அவர் என்னை மணக்கச் சம்மதித்தார்.

திருமணத்துக்கு என் தந்தையிடம் பணம் தனி ஏதும் எதிர்பார்க்கக் கூடாது என்பதோடு எனது திருமணத்துக்குப் பிறகும் என்னை வேலை பார்க்க அனுமதித்து அதன் மூலம் எனக்குக் கிடைக்கும் சம்பளப் பணத்தை என் அப்பாவிடம் கொடுக்க அனுமதிக்க வேண்டும். இது என் நிபந்தனை. அவர் ஏற்றுக் கொண்டார்.

கல்யாணத்தை மிக மிக எளிய முறையில் நடத்த வேண்டும். தம்முடைய இரண்டு

பெண் குழந்தைகளைத் தாயினும் மேலாக இருந்து வளர்த்து ஆளாக்க வேண்டும். இது அவர் நிபந்தனை. நான் ஏற்றுக் கொண்டேன்.

இப்படியாக என்னுடைய திருமணத்தை நானே நிச்சயித்துக் கொண்டேன். இதனால் என் அப்பாவுக்கு எந்தக் கஷ்டமும் ஏற்படப் போவதில்லை. ஏனெனில் திருமணத்துக்குப் பிறகும் அவருக்குத் தேவையான என்னுடைய பணம் கிடைத்துக் கொண்டிருக்கும் இல்லையா?

இதை என் அப்பா ஏற்றுக் கொள்ள வேண்டுமே?.... அவர் ஒரு எக்ஸென்ட்ரிக் ஆயிற்றே.

சென்ற சம்பளத் தேதியன்று வீடு திரும்பும் போது மெதுவாகத் தயங்கித் தயங்கிப் பேச்சை ஆரம்பித்தேன். 'தாட் பூட்' என்று தாண்டிக் குதிப்பார் அவர் என்று நான் எண்ணினேன். ஆனால் வழக்கத்துக்கு மாறாகப் பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டார். சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லி விட்டேன்.

'திருமணத்துக்குப் பிறகும் சம்பளப் பணத்தைத் தந்து கொண்டிருக்கிறேன்' என்று மட்டும் கூறவில்லை. ஏனெனில் தம்மைக் கையால் ஆகாதவன் என்று குத்திக் காட்டுவதாக எண்ணி விட்டால்....! காரியமே கெட்டு விடுமே!

பலத்த யோசனைக்குப் பிறகு சொன்னார்:

''யூ நாட்டி கேர்ல்... ஐ அக்ஸெப்ட் வாட் யூ ஸே...கேரி ஆன்...'' என்று தமக்கே உரிய பாணியில் கூறினார். நான் நினைத்தது வேறு. ஆனால் அவர் நடந்து கொண்ட விதம் வேறு. ஏனெனில் அவர் ஒரு எக்ஸென்ட்ரிக்!

திருமண ஏற்பாடுகள் விரைவாக நடக்கத் தொடங்கின. ஒரு கோயிலில், ஒருசிலர் முன்னிலையில் திருமணம் நடந்தது.

இன்று சம்பள நாள். பல்லாண்டுகளாகச் சம்பளத்தை வாங்கிக் கொள்ள பஸ் ஸ்டாப் பிற்கே வந்துவிடும் என் தந்தை இன்று வருவாரா, மாட்டாரா?

காலையிலிருந்தே என்னை வாட்டிக் கொண்டிருந்த கேள்வி இது. வருவார் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் அவர் வரவில்லை. இது எனக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது.

சிந்தனையில் மூழ்கியபடி நடந்து சென்ற நான், என் அப்பாவின் வீட்டை அடைந்தேன். உள்ளே சென்ற நான் என் சம்பளப் பணத்தை எடுத்து அம்மாவிடம் தந்து, 'அப்பாவிடம் கொடுத்துவிடு' என்றேன். அதை வாங்கிய அவள் உள்ளே பூஜை அலமாரியில் கொண்டு வைத்தாள். இருவரும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தோம். இரவு ஏழரை மணி. அப்பா வந்தார்.

முன் ஹாலில் இருந்தபடியே அம்மாவைக் கூப்பிட்டு, ''இந்தா, இம்மாத 'ஜாப்' ஒர்க்' பணத்தில் உன் சங்கிலியை மீட்டுவிட்டேன்'' என்று கூறிக் கொண்டே அம்மாவிடம் சங்கிலியைக் கொடுத்தார்.

எனக்கு விஷயம் புரிந்தது.

என்னுடைய திருமணத்துக்காக வாங்கிய சொற்பக் கடனை அவரால் தாங்கமுடியவில்லை.



## ராக்கபெல்லரின் மகிழ்ச்சி!

அமெரிக்க உதவி ஜனாதிபதி தமது மனைவியைப் பொறுத்த மட்டில் சந்தோஷமாக இருப்பார். காரணம் — அவர் மனைவி பெயர் திருமதி ஹாப்பி ராக்கபெல்லர்! (Mrs. Happy)

—டைம்

—பாலி

அம்மாவின் நகைகளை அடகு வைத்திருக்கிறார். அவற்றை மீட்க இப்போது கடினமாக உழைக்கத் தொடங்கியுள்ளார்.

அம்மா சொன்னாள், நான் வந்திருப்பதாக. உடனே உற்சாகத்துடன் கூவிக்கொண்டே உள்ளே வந்தார். நலம் விசாரித்தார்.

அப்போது பூஜை அலமாரியிலிருந்து நான் கொடுத்த என் சம்பளப் பணத்தைக் கவரோடு அவரிடம் கொடுத்தாள், அம்மா. 'என்ன!' என்ற பாவத்தோடு வாங்கிக் கொண்டார். அம்மாதான் சொன்னாள் 'நான் கொடுத்தது' என்று.

திடீரென்று பணத்தைக் கவரோடு பக்கத்தில் இருந்த டீப்பாயில் வீசி எறிந்தார்.

''அந்த அளவுக்கு உனக்குத் திமிர் ஏறி விட்டதா? நான்ஸென்ஸ்... என்னை என்ன, பிச்சைக்காரன் என்று நினைத்தாயா? என் வயிற்றுப் பாட்டை என்னாலேயே கவனித்துக் கொள்ள முடியும்...'' என்று கத்தினார்.

நான் நடுங்கிக் கொண்டே, ''இல்லை... அப்பா... வந்து....'' என்றேன்.

''ஐ டோன்ட் வான்ட் எனி எக்ஸ்பிளனேஷன்.. டேக் இட்... அன்டு கெட் அவுட்'' என்று அப்பா கத்தினார்.

நான் பணத்தை எடுத்துக் கொண்டு வாயிற்புறம் நகர்ந்தேன். அம்மா ஓடிவந்து என் கையைப் பிடித்து இழுத்தாள். இதை அப்பா பார்த்து விட்டார்.

ஆவேசத்தோடு ஓடிவந்து அம்மாவைப் பிடித்து உள்ளே தள்ளினார். 'கெட் இன்' என அலறினார்.

இனி நாம் நின்றால் நம்மையும் வெளியில் தள்ளத் தயங்க மாட்டார் என்று நான் உணர்ந்தேன். மெதுவாக வாயிற்புறம் நகர்ந்தேன். 'கெட் அவுட்' என்று சீறினார்.

வெளி கேட் அருகில் வந்து நின்று உள்ளே பார்த்தேன். உள்ளே 'பளார்', பளார்' என்று சத்தம் கேட்டது. பாவம் அம்மா!

மீண்டும் நான் உள்ளே போனால் அம்மாவுக்கு நடப்பது நமக்கும் நடக்கும் என்பது எனக்குத் தெரிந்ததுதான்.

ஆனால் என் உள் மனம் மட்டும் என் அப்பாவை நாளை என் வீட்டில் எதிர்பார்க்கிறது!

அவருக்கு நாளைக் காலை 'பிரேக்ஃபாஸ்ட்.' என்னுடைய வீட்டில்தான்!

ஏனெனில் எங்கப்பா ஒரு எக்ஸென்ட்ரிக்!

102 இல்லத்தரசிகளின் இணையற்ற ஆலோசனை; **VOLTAS**
வோல்டாஸ் நிபுணத்துவம் இரண்டும் இணைந்ததன் பயன்—

# புதிய வோல்டாஸ் ஒபல் 160

## உங்கள் நலனை உளத்தில் கொண்டு உருவாக்கப்பட்ட ஃப்ரிஜ்



**1.** 3 பெரிய ஷெல்புகள்—இந்த வகையிலேயே மிகப்பெரிய ஷெல்ப் இடப்பரப்புள்ளது.

**2.** 35 நிமிடங்கள் விரைவாக ஐஸ் தருகிறது.

**3.** 'அதிவிரைவில்' குளுமை தரும் டிரே, 6 குளிர் பானக் குப்பிகளுக்கு 30 நிமிடங்களில் குளுமை வழங்கும்.

**4.** 24% குறைவான மின்சக்திச் செலவு.

### இணையற்ற 4 சிறப்பம்சங்கள்

இந்த இணையற்ற 4 சிறப்பம்சங்களும் உங்களைப் போன்ற பாரபட்சமற்ற திறமையுள்ள 4 இல்லத்தரசிகள் அளித்த ஆலோசனையின் பேரில் உருவானவை: திருமதி ஷிரீன் முஜூபாய், திருமதி அஜயா பட்டாச்சார்யா, திருமதி வீணு ஷ்ரோட்கர், திருமதி விஜயலட்சுமி சுவாமிநாதன்

### இணையற்ற இதர சிறப்பம்சங்கள்

உபயோகிக்க உகந்த லாமினேட் மேற்பரப்பு; வீட்டில் எப்போதும் மாற்றிக்கொள்ள வசதியாக எளிதில் சுழற்றியெடுக்கத் தக்க குளிர்பதன சாதனம்; கட்டுறுதியான ஒற்றை வார்ப்பு—பூச்சிகள் புக இடமே இல்லை; விசேஷ ஓவன்—டிரை முறைமூலம் இரு முறை அல்ல மும்முறை செய்யப் பட்ட வண்ணப் பூச்சு அதிகப் பாதுகாப்பு

102 இல்லத்தரசிகளைக் கலந்தாலோசித்ததன் காரணம் இதுவே—இப்போது மகிழ்ச்சிதானே?

**வோல்டாஸ் லிமிடெட்:** பம்பாய், கல்கத்தா, புது தில்லி, சென்னை, பெங்களூர், லக்னோ, பாட்னா, அஹமதாபாத், சிகந்தராபாத், கோச்சி, கான்பூர், ஜம்ஷெட்பூர்

உங்கள் வட்டாரத்திலுள்ள எமது அங்கீகாரம் பெற்ற விற்பனையாளரைக் காண அருகிலுள்ள எமது வோல்டாஸ் அலுவலகத்தைத் தயவு செய்து அணுகுக

CMV-105-203R Ta

# லோயர் பர்த்

பி.வி. ஆர்.

நீலகிரி எக்ஸ்பிரஸ் புறப்படப் பத்து நிமிடங்கள் இருக்கையில் அவர் ஒரு சிறு பெட்டியுடன் நான் இருந்த முதல் வகுப்பு கூப்பே கம்பார்ட்மெண்டில் ஏறினார். அவரைப் பார்த்ததும் ஏழெட்டு மாதங்களுக்கு முன் நடந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது.

என் நினைவில் நான் எனக்குள்ளேயே சிரித்துக் கொண்டிருக்கையில், "ஸார், எது வரைக்கும்?" என்று கேட்டார். என்னை ஏழெட்டு மாதங்களுக்கு முன் பார்த்த ஞாபகம் அவருக்கு இல்லை என்பதை நான் புரிந்து கொண்டேன்.

"கோயமுத்தூர்."

"நானும் கோயமுத்தூர் தான்!"

ஒரு நமுட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு மாலை பேப்பரைப் பிரித்தேன்.

"பத்து நாள் முன்னாடியே என் மானேஜர் ரிஸர்வ் பண்ணியிருக்கான். அப்படியும் அப்பர் பர்த் போட்டிருக்கான். இவ்வளவுக்கும் ஸ்பெஷலா லோயர் வேணும் என்று சொல்லியிருக்கு."

"ஓகோ."

என் அசுவாரசியத்தை அவர் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. வண்டி புறப்பட்டு ஐந்து நிமிஷத்துக்கெல்லாம், "எனக்கு ராத்திரி பன்னிரண்டு மணி வரையில் தூக்கம் வராது. அப்படி ஒரு பழக்கம்" என்றார்.

"டாக்டரைப் பார்க்கலாமே?"

"நோ நோ... இது ஒரு டிஸீஸ் இல்லே. பழக்கம். ஹாபிட். சின்ன வயசிலிருந்தே ஏற்பட்டது. போதாததற்கு இன்னிக்குக் காத்தாலே பாத் ரூமில் விழுந்து விட்டேன். முழங்காலில் நல்ல அடி."

"டாக்டரைப் பார்த்திருக்கணும்."

"என்ன டாக்டர்கள்! ஏதோ ஏழே முக்கால் ரூபாய்க்கு ஒரு ஆயின்ட்மெண்ட் எழுதிக் கொடுத்தான்.... நான் எதுக்குச் சொல்ல வரேன் என்றால்..." அவர் இழுத்தார்.

நான் மௌனம் சாதித்தேன். ஏழெட்டு மாதங்களுக்கு முன்னால் இதே நாடகத்தைத்தான் அவர் நடத்தி, வெற்றி கண்டு ஒரு பிரயாணியின் லோயர் பர்த்தை அபகரித்துக் கொண்டார். நான் அன்று என்னுடைய அப்பர் பர்த்தில் இருந்து கொண்டு கவனித்தேன். அன்று, இரவு பன்னிரண்டு மணி வரை தூக்கம் வராததற்குக் காரணம் 'இன்ஸோம்னியா' என்றார். குளியலறைக்குப் பதிலாக மாடிப் படி அவருடைய காலுக்குச் சிரமம் கொடுத்தது. அன்று அவருடைய கதையைக் கேட்டு, தம்முடைய லோயர் பர்த்தை விட்டுக்கொடுத்தவர் அவரை விடப் பத்து அல்லது பதினைந்து வயது அதிகமானவர். அறுபத்தைந்து வயதுப் பெரியவர். தம் மனைவியை லோயர் பர்த்தில் படுக்கச் சொல்லிவிட்டுக் கைத்தடியைக் கீழே ஒரு மூலையில் போட்டு விட்டு, சிரமப்பட்டு மேலே ஏறிப் படுத்துக்கொண்டார். சர்க்கரை வியாதி போலிருக்கிறது. மூன்று நான்கு தடவை இரவில் இறங்கி இறங்கி, ஏறி ஏறி அவஸ்தைப்பட்டார். இவர் லோயர்பர்த்தில் பத்தரையிலிருந்தே குறட்டை விட ஆரம்பித்து விட்டார்.



அன்று கிழவரை ஏமாற்றியவர் இன்று என்னிடம் தம்முடைய சாமர்த்தியத்தைக் காட்டுகிறார்!

என்னுடைய மௌனம் அவருடைய பிடிவாதத்தை அதிகமாக்கியது. பெட்டியில் மொத்தம் இரண்டே 'பர்த்'கள்தாம். எனக்குக் கீழே, லோயர் பர்த். அவருக்கு மேலே. என்னை மேலே அனுப்ப அவர் துடித்தார்.

"ஸார்!" என்றார் வண்டி திருவள்ளூரைத் தாண்டியதும்.

"என்ன?"

"என் வயசையும் அடிபட்ட முழங்காலையும், தூக்கம் வராத தோஷத்தையும் கருதி உங்கள் லோயர் பர்த்தைத் தருகிறீர்களா?"

நான் முகத்தில் அறைந்தாற்போல, "நான் இருபது நாள் முன்னாலேயே ரிஸர்வ் பண்ணி லோயர் பர்த் வாங்கி யிருக்கிறேன். அரக்கோணத்தில் இறங்கி டி. டி. ஆரிடம் கேட்டுப் பாருங்கள்" என்றேன்.

"வந்து..."

"ஐ ஆம் ஸாரி, ஸார்..." பழைய சம்பவத்தை நினைவூட்ட நா துடித்தது. என்னை நானே அடக்கிக் கொண்டேன்.

அப்புறம் நான் என் படுக்கையை விரித்தேன். அவர் மேலே போனார். கோயமுத்தூர் வரைக்கும் பேச்சே இல்லை. கிழவரை ஏமாற்றியதற்கு நான் அவர் சார்பாக வஞ்சம் தீர்த்துக் கொண்டேன்.

முதலில் ரயில் டிக்கட்டுக்காகத் தவிப்பது. டிக்கட் கிடைத்த பின் லோயர் பர்த்துக்காக உயிரை விடுவது. அது நேரடியாகக் கிடைக்காவிட்டால் இது மாதிரிப் பாசாங்கு செய்து பிரயாணிகளை ஏமாற்றப் பார்ப்பது. இது மாதிரி எத்தனையோபேர் நடந்து கொள்ளுகிறார்கள். இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம், சுயநலம். சுய சௌகரியம், சுய மதிப்புத்தான். ஏற்கனவே இவரைத் தெரியாமலிருந்தால், நானும் ஏமாந்து போயிருப்பேன்.



## 9. நாவல் மோகம்

காகிதமாம் கப்பலிலே – ஐலசா! ஐலசா!
கற்பனையாம் கடலோடி – ஐலசா, ஐலசா!
ஏகிடலாம் எங்கேயோ – ஐலசா, ஐலசா!
என்னென்ன அற்புதங்கள்! - ஐலசா, ஐலசா!

தொடக்கத்தில், அய்யாசாமி அய்யரின் உடைமையான கனமான புத்தகங்களை, வயதுக்கு மூத்திய அக்கறையுடன் படித்துக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தி, ஒரு கட்டத்தில் அவற்றுக்கு மாற்றாக, இலேசான புத்தகங்களைப் படிக்கலானான். ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி அய்யங்கார், ரங்கராஜு முதலானோர் உற்பத்தி செய்து குவித்துக் கொண்டிருந்த நாவல்களே அந்த இலேசான புத்தகங்கள். அண்ணனும் தம்பியும் மாயூரத்துக்கும் மற்றும் அக்கம்பக்கத்து ஊர்களுக்கும் நடவா நடை நடந்து, யார் யாரிடமோ கெஞ்சிக் கூத்தாடி, அந்த நாவல்களை இரவல் வாங்கிக் கொண்டு வருவார்கள். வாங்கி வர முடிந்தது ஒரே ஒரு நாவல் என்றால், யார் அதை முதலில் படிப்பது என்பதற்காக அவர்கள் சண்டை போடுவார்கள். ஒவ்வொரு சமயமும் தம்பிக்கே அண்ணன் விட்டுக் கொடுப்பான்.

அந்தக் காலத்தில் ரங்கராஜுவின் நாவல் ஒன்று தமக்குப் படிக்கக் கிடைத்த விவரத்தையும், அதைப் பற்றித் தாம் கொண்ட கருத்தையும் பல ஆண்டுகளுக்குப் பிறகு கல்கி, கட்டுரை ஒன்றில் தெரிவித்தார்:



விக்டர் ஹியூகோ



சார்லஸ் டிக்கன்ஸ்

# பொன்னியின் புதல்வர்

சுந்தா

சென்னைப் பட்டணத்திலிருந்து எங்கள் கிராமத்துக்கு வந்த ஒருவர், ''இராஜாம்பாள்'' என்னும் துப்பறியும் நாவலைக் கொண்டு வந்தார். அவர் அதைப் படித்து முடிக்கும்வரையில் பக்கத்திலேயே காத்திருந்து அவரிடமிருந்து அப்புத்தகத்தை வாங்கிக் கொண்டேன். அன்றிரவு புகைந்து கொண்டிருந்த சிம்னி விளக்கின் வெளிச்சத்தில் புத்தகத்தை ஒரே மூச்சாகப் படித்து முடித்து, இரவு சுமார் மூன்று மணிக்குத் தூங்கச் சென்றது இன்னும் எனக்கு ஞாபகம் இருக்கிறது.

மறுநாள் பொழுது விடிந்ததும் மறுபடியும் ஒரு தடவை அதை அடியிலிருந்து கடைசி வரையில் படித்து முடித்தேன். புத்தகத்தைப் பற்றி அப்போது நான் கொண்ட அபிப்பிராயம் என்ன என்பதை உடனே என் நண்பனிடம் தெரிவித்தேன். ''இதோ பார், முத்து, இந்த மாதிரிப் புத்தகம் தினம் ஒன்று மட்டும் என்னிடம் கொடுத்து விட்டால், வாழ்க்கையில் எனக்கு வேறொன்றும் வேண்டாம். 'ராபின்ஸன் க்ரூஸோ'வைப் போல் தனியாக ஒரு தீவில் கொண்டு போய் விட்டு விட்டால் ரொம்பச் சந்தோஷமாக இருப்பேன்'' என்றேன்.

பாரிஸ்டர் கொக்குதுரை என்ற பெயரைப் படித்த போது என்ன சிரிப்பு வந்தது? வக்கீல் துரைசாமி அய்யங்கார் கொக்கு துரையை மண்டையில் அடித்துப் பேசிய போதெல்லாம் எவ்வளவு பெருமையாக இருந்தது? இராஜாம்பாள் கொலையுண்ட செய்தி எவ்வளவு திடுக்கிடச் செய்



ஸர் வால்டர் ஸ்காட்

அலெக்ஸாந்தர் டூமாஸ்



தது? கடைசியில் அவனைக் கோவிந்தன் உயிரோடு கொண்டு வந்து சேர்த்ததும் என்ன ஆச்சரியம், என்ன சந்தோஷம்? அந்தச் சமயத்தில் ஒரு தேர்தல் நடந்து, துப்பறியும் கோவிந்தனும் லோகமான்ய திலகரும் அந்தத் தேர்தலில் போட்டியிட்டார்களானால், துப்பறியும் கோவிந்தனுக்கே என் வோட்டைக் கொடுத்திருப்பேன். (ஆனந்த விகடன் 17-12-'34)

ஒரு நாள் நாவல் ஒன்றைக் கிருஷ்ணமூர்த்தி படித்து முடித்துவிட்டு, ''பலே பேஷ்!'' என்று வாய்விட்டுக் கூவிக் கொண்டே, அதைத் தட்டிக் கொடுத்து மூடியதை அய்யாசாமி அய்யர் கவனித்து, ''அப்படி என்னடா பிரமாத நாவல்?'' என்று கேட்டார். அவன் அந்த நாவலின் கதையைச் சொல்லவே, ''நன்றாய் இருக்கிறதே, நானும் படித்துப் பார்க்கிறேன்'' என்று அதை வாங்கிக் கொண்டார். படித்து முடித்த பிறகு, சாரப் பிறை வழியே அவனை அவர் கூப்பிட்டு, ''கதையின் முடிவு நீ சொன்ன மாதிரி இல்லையே!'' என்று கூறினார். ''அப்படி முடிந்திருந்தால் இன்னும் நன்றாய் இருந்திருக்கும் அல்லவா?'' என்று அவன் கேட்டான். இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த அண்ணன், ''இவன் இப்படித்தான் எந்தக் கதையைப் படித்துச் சொன்னாலும், தலையையோ வாலையோ மாற்றி விடுவான்'' என்று குற்றம்சாட்டினான்.

தனது கிராமத்தில் காணாத, காண முடியாத விசித்திரமான ஆண்களும் பெண்களும் நிறைந்த நாவல்களைப் படிப்பதில் உண்டான மோகம், சிறுவன் கிருஷ்ணமூர்த்திக்கு முற்றிக் கொண்டது. எங்கிருந்தோ எப்படியெல்லாமோ திரட்டிய நாலைந்து நாவல்களை எடுத்துக் கொண்டு, ஆற்றங்கரை ஆலமரத்தை நோக்கிச் செல்லுவான். மரத்தடியில் சாய்ந்து கொண்டே ஆசையுடன் நாவல்களைப் படிப்பான். ''பலே பலே'' என்று பாராட்டுச் சொற்களைப் பொழிந்து கொண்டு பக்கங்களைப் புரட்டுவான். திடுக்கிடும் நிகழ்ச்சிகள் வரும் போது, ''ஐயோ!'' என்று கத்துவான். ஆச்சரியமான நிகழ்ச்சி என்றால், ''போடு சக்கை!'' மிக மிகச் சுவையான பகுதி ஒன்றைப் படித்து முடித்தால், ''நாசமாய்ப் போச்சு!'' அவனுடைய அகராதியில்



வேதநாயகம் பிள்ளை



ராஜம் ஐயர்



பண்டித நடேச சாஸ்திரியார்

அ. மாதவையா.






ஆரணி குப்புசாமி முதலியார்


வடுவூர் துரைசாமி ஐயங்கார்


ஜே. ஆர். ரங்கராஜு

அதற்கு, ''பிரமாதம்'' என்று பொருள். ''சேச்சேச்சே!'', ''சீச்சீச்சீ'' என்றுலும் உயர்ந்த பாராட்டே.

வறுத்த நிலக்கடலையை மடியில் கட்டிக்கொண்டு ஒவ்வொன்றாய் உடைத்துத் தின்று கொண்டே படிப்பான்; கடலைத் தீர்ந்து போனால், இலேசாக வலிக்கும்படி தலை மயிரைத் திருகிக் கொண்டே படிப்பான்; அல்லது கீழ் உதட்டை நிமிண்டிக் கொள்வான். அதன் மீதுள்ள மெல்லிய தோலை உரித்துக் கொள்வான். உதடு மிகவும் வலித்தால், அதை விட்டுவிட்டு, நெற்றியை விரல் நுனியால் தடவிக் கூச்சம் காட்டிக் கொண்டே படிப்பான். இவைகளெல்லாம் பிற்காலத்தில் அவருடைய சேஷ்டைகளாக நிலைத்துவிட்டன.

ஆலமரத்தடி அலுத்துப் போனால், வெகுதூரம் நடந்து, இருப்பைப்பட்டுக் கோயிலுக்கு, புத்தகமும் கையுமாய் வேர்க் கடலையும் மடியுமாய்ச் செல்லுவான். அங்கே உட்காருவதற்கு, மரக்கிளைகள், புல் தரை, படிக் கற்கள், இடிந்து சாய்ந்த சுவர்கள் என்று வாய்ப்பான ஆசனங்கள் பல. ஏதாவது ஒன்றில் உட்கார்ந்து, பறவைகளின் இசையைக் கேட்டுக் கொண்டே, இலுப்பைப் பூவின் மணத்தில் சொக்கிக் கொண்டே கதை உலக மாந்தருடன் உறவாடுவான். என்ன ஆனந்தம்!

ஏதேனும் ஒரு நாவல் அந்திப் பொழுதில்தான் கிருஷ்ணமூர்த்திக்குக் கிடைத்ததென்றால், அன்றிரவே அதை வாசித்துத் தீர்க்கா விட்டால் அவனுக்குத் தூக்கம் வராது. வீட்டுப் பெரிய திண்ணையில், பாயை விரித்துப் போட்டுக்கொண்டு தகர விளக்கின் மங்கல் ஒளியில் மண்ணெண்ணெய்ப் புகை நாற்றத்தையும் கொசுக் கடியையும் பொருட்படுத்தாமல் மாயக் கதை உலகில் புகுந்து விடுவான். எங்கெங்கோ யார் யாராகவோ மாறிவிடுவான். அற்புதப் புதையலைத் தேடி அலைவான்; தேடுகையில் அலை அலையாய் அபாயங்கள்; தேடிக் கண்ட பிறகு அடுக்கடுக்காய் ஆபத்துக்கள். எல்லாவற்றையும் தாண்டிக் கண்டு பிடிப்பது காணாமல் போவதை. ஒரு சிறு துரும்பையோ, துரும்பிலும் மெல்லிய ரேகையையோ கொண்டு துப்புத் துலக்கி மீட்பான். காதலியைக் கவர்ந்து செல்லும் கொடியவனைக் காடு மேடெல்லாம் துரத்திச் செல்வான். சிறைப்பட்டு, பலாத்காரத்துக்கு உள்ளாகிக் கற்பை இழக்கும் ஆபத்திலுள்ள அபலைப் பெண்ணைத் தக்க சமயத்தில் காப்பாற்றி விடுவான். காப்பாற்றுகையில் குறுக்கிடும் துஷ்டனுடன் முஷ்டி யுத்தம் செய்து அவனுடைய முழிகளைப் பெயர்ப்பான்; துஷ்டனுக்குத் துணையாய் வரும் கையாட்களின் கைகளுடன் கால்களையும் ஒடித்துப் போடுவான். விடுதலை அடைந்த களிப்பில் ''பிராண நாதா'' என்று கூவி அதே களிப்பு மேலீட்டால் மூர்ச்சை போட்டு விழும் கனகாம்புஜத்தைக் கனஜோராய்ப் புஜத்தில் தாங்கி அணைத்துக் கொள்வான்.

தமிழில் தரமான முன்னோடி நாவல்கள் என்று சாதாரணமாய் மூன்றைக் குறிப்பிடுவதுண்டு. பிரதாப முதலியார் சரித்திரம் — வேதநாயகம் பிள்ளை; கமலாம்பாள் சரித்திரம் — ராஜமையர்; பத்மாவதி சரித்திரம் — மாதவையா. இவற்றுடன் இன்னும் இரண்டு நாவல்களையும் இலக்கிய விமர்சகர் க. நா. சுப்பிரமணியம் சேர்த்துள்ளார்: தீனதயாளு — நடேச சாஸ்திரி; காமாட்சி — பொன்னுசாமி பிள்ளை.

இந்த ஐந்து நாவல்களையும், அவற்றின் ஆசிரியர்கள் எழுதிய பிற நூல்



First Anniversary. In cherished memory of our beloved mother Smty. P. N. MEENAKSHI AMMAL who left us for her heavenly abode on 14th September last year. Loved in our hearts you will stay never forgotton even for a minute.

P. N. Easwaramony, P. N. Narayanan
P. N. Subramanian (sons)
Mrs. Ananthalakshmy Krishna Iyer
P. N. Lakshmy (daughters)
P. E. Narayana Iyer (husband)

களையும் கிடைத்தபோது கிருஷ்ண மூர்த்தி படித்திருப்பான். ஆனல் நாவல் படிப்பதில் அப்போது அவன் கொண்டிருந்த அசுரப் பசிக்கு அவை எம்மாத்திரம்? முன் குறிப்பிட்ட ரங்கராஜு முதலியோரின் நாவல்களையும், அவர்களைப் பின்பற்றி எழுதியவர்களின் நாவல்களையும் படித்தான். கால், அரை, முக்கால், முழுது என்று வெவ்வேறு அளவுகளில் திருடிய நாவல்கள் அவை என்பது அப்போது அவனுக்குத் தெரிந்திருக்காது. அதையும் கவனிக்கவில்லை; தமிழின் தரத்தையும் கவனிக்கவில்லை. கதை, கதை என்று கதையையே குறியாகக் கொண்டு அந்த நாவல்களைப் பருகினன். அப்போதும் தீராப் பசியால் தவித்துக் கொண்டிருந்தான்.

நல்லவேளையாக அவன் விரைவிலேயே ஆங்கிலத்தைப் புரிந்துகொள்ளும் தேர்ச்சியை அடைந்து விட்டான். அந்த மொழியின் மூலம் அவனுடைய பசியைத் தீர்க்கப் பலர் முன்வந்தார்கள்: விக்டர் ஹ்யூகோ, அலெக்ஸாந்தர் டூமாஸ், ஸர் வால்டர் ஸ்காட், லார்ட் லிடன், சார்ல்ஸ் டிக்கன்ஸ், வில்லியம் தாகரே, தாமஸ் ஹார்டி. இந்தக் ''கிளாஸிகல்'' ஆசிரியர்களுடன், ''பாபுலர்'' ஆசிரியர்கள் சிலரும் சேர்ந்து கொண்டார்கள்: சார்ல்ஸ் கார்விஸ், எட்கார் வாலஸ், வில்லியம் ரெய்னல்ட்ஸ்.

அன்னிய மொழியில் அவர்கள் வர்ணித்த காட்சிகளும் அன்னியம்; நிகழ்ச்சிகள் பலவும் அன்னியம். பழக்க வழக்கங்கள், நடையுடை பாவனைகள் முற்றிலும் அன்னியம்; ''இப்படியும் உண்டா, இப்படியும் நடக்குமா?'' என்று சந்தேகம் கொள்ளும்படி அன்னியம். ஆனாலும் என்ன கற்பனை ஆற்றல்! என்ன கதை சொல்லும் திறமை! அப்படியே மனத்தை மயக்குகின்றனவே! நெஞ்சை அள்ளுகின்றனவே! அவற்றின் முன் அதுவரை வந்த தமிழ் நாவல்கள் எம்மாத்திரம்! ஹ்யூகோவைப் போல், டிக்கன்ஸைப் போல் தமிழில் ஏன் யாரும் எழுதவில்லை? இனி எழுதுவார்களோ?

கல்கி பெரிதும் ரசித்துப் போற்றிய அன்னிய நாவலாசிரியர்களில் ஹ்யூகோ ஒருவர் என்பதை, அவருடைய இந்தப் பாராட்டுரையிலிருந்து ஊகிக்கலாம்:

உலகத்தின் தலைசிறந்த பேராசிரியர்கள் பத்துப் பேரைப் பொறுக்கினல், அவர்களில் ஒருவராகப் பிரான்சு தேசத்தின் விக்டர் ஹியூகோவைப் பொறுக்கியே தீரவேண்டும். அத்தகைய பேராசிரியர் எழுதிய நூல்களிலே தலைசிறந்த நாவல் 'லே மிஸராபில்' என்னும் அமர காவியம். உலகத்தின்நாகரிக பாஷைகள் அனைத்திலும் அது மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

விக்டர் ஹியூகோ வாழ்ந்த காலத்தில் பிரான்சு தேசத்தின் சமூக நிலையை ஆதாரமாக வைத்து இந்த நாவல் எழுதப்பட்டது. சட்டத்துக்கும் கருணைக்கும் ஏற்படும் போராட்டத்தை ஆசிரியர் சித்திரித்திருக்கிறார். அதே சமயத்தில் பல தெய்விகமான கதாபாத்திரங்களைச் சிருஷ்டித்திருக்கிறார்.

நம் நாட்டு மடாதிபதிகளைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகமாக அக்காலத்து பாதிரிமார்கள் மேனட்டில் அபகீர்த்தி பெற்றிருந்தார்கள். அக்காலத்தில் ஒரு பாதிரியாரைத் தெய்வ மனிதராக விக்டர் ஹியூகோ சிருஷ்டித்திருக்கிறார். (கல்கி இதழ் 23-3-'52)

தமிழ் நாவல்களைக் கிருஷ்ணமூர்த்தி குறைத்துக் கொண்டு, விரிவான, விந்தையான கற்பனை உலகத்துக்குத் தன்னைக் கூட்டிச் சென்ற ஆங்கில மொழி நாவல்களை மேலும் மேலும் அதிகமாகப் படித்தான். மாயூரம் நண்பர்கள்மூலம் அவை நிறையக் கிடைக்கவும் செய்தன.

ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பால் பல்வேறு களங்களிலும் காலங்களிலும் நிகழ்ந்தவற்றை, தன் வீட்டு அதே திண்ணையில், அதே மங்கிய ஒளியில் அவன் திரும்பத் திரும்பக் கண்ட இரவுகள் எத்தனை எத்தனையோ! அப்படித் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு படித்ததை வீட்டார் எவ்வளவோ கண்டித்தும் பயனில்லை.

எந்த நாவலையும் முடித்த பிறகுதான் தூக்கம். சில இரவுகளில், படித்து முடித்து விளக்கை அணைத்த பிறகு, தெருவின் மேல் பக்கமோ கீழ்ப் பக்கமோ உலவி வரச் செல்வான். கற்பனை உலகிலிருந்து இயற்கை உலகில் உலாவுவான். அப்போதுதான், ஆயிரம் ஆயிரம் தவளைகள் நாலாபுறமும் முறை வைத்துக் கத்துவது கேட்கும். உயரே எண்ணிலா நட்சத்திரங்கள். திடீரென ஒரு விண் பொறி தொலைவிலே பாய்ந்து விழும். பக்கத்துப் பனை மரத்திலிருந்து ஓர் ஆந்தை அலறும்.

திண்ணைக்கு வந்து பாயில் படுப்பான். கண்ணை மூடிக் கொண்டு, இயற்கை உலகை ஒதுக்கி விட்டு, தான் படித்த கதையை மீண்டும் நினைவு படுத்திக் கொண்டு, மீண்டும் கற்பனை உலகில் மனத்தை ஓட விடுவான்.

வௌவால்கள் படபடவென்று சிறகடித்துப் பறப்பது காதில் விழும். தவளைகளின் கூட்டோலம் தணிந்தும் ஓங்கியும் கேட்கும். தணிந்த இடைவேளை ஒன்றில், பாம்பின் வாயில் அகப்

பட்ட தவளையின் சோகக் குரல் கேட்கும். அல்லது, பக்கத்துக் கிராமம் ஒன்றிலிருந்து உடுக்கை ஒலியோ பம்பை ஒலியோ மிதந்து வரும். அல்லது, நாயனப் பேரிசை மெல்லிசையாய்த் தணிந்து, தவழ்ந்து வந்து, இன்ப வேதனையைக் கொடுக்கும். கொஞ்சம் கொஞ்சமாய்ச் செவிப் புலன் ஒடுங்கத் தொடங்கும். ''நிலமகள் துயிலுகையில் நெஞ்சகம்தான் விம்முவதேன்?'' என்று பின்னர் பொன்னியின் செல்வன் நாவலில் புனையப் போகிற பாட்டின் பொருளுக்கு ஒப்பான, ஏதோ ஓர் இனம் தெரியாத உணர்ச்சி நெஞ்சிலே எழுந்து எழுந்து ஓயும். விசித்திரமான, அற்புதமான, வர்ணக் கனவு லோகத்தில் சிறுவன் உலவுவான். அந்தக் கனவு லோகக் காட்சிகளில் பல மனத்திலே தேங்கி நின்று, உருமாறி நனவுக் காட்சிகளுடன் கலந்து கலந்து, பின்னர் வண்ணக் கதைகளாய் வெளி வந்தன.

அதிகாலையில், வால் நீண்ட கருங்குருவியின் குரலைக் கேட்டோ, சேவலின் கூவலைக் கேட்டோ அவன் மெய்யுலகுக்கு மீண்டு, குதித்தோடி வைகறைக் காட்சிகளைக் கண்டு மகிழ்வான். ஒளியின் விளையாட்டையும் உயிரின் விளையாட்டையும் நெடுகிலும் கண்டவாறே ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வருவான். புதுக் கோலங்களை மிதிக்காமல் தாண்டித் தாண்டி நடந்து, வீட்டுக்குள் நுழைவான். வயிற்றுப் பசியுடன் நாவல் பசியும் எடுத்துவிடும். ''இன்னும் ஏதாவது நாவல்களை வேட்டையாடிக் கொண்டு வரலாம் வா'' என்று அண்ணனைக் கூப்பிடுவான்.

கைக்குக் கிடைத்த நாவல்களை எல்லாம் தராதரம் பாராமல் கிருஷ்ணமூர்த்தி படித்தான் என்பது உண்மையே. ஆனால் அவன் கீழ்த்தரமான சம்பவங்களும் வர்ணனைகளும் கொண்ட நாவல்களை அறவே வெறுத்தான்: கல்கியின் நாவல்களே இதற்குச் சான்று. இளமைப் பருவத்திலிருந்தே ருசிக் கேடு, அசிங்கம், ஆபாசம் முதலியவற்றை வெறுத்து வந்தார் அவர். காதற் சுவை என்ற பெயரால் காமப் பாலை விற்பனை செய்வதைக் கடுமையாய்க் கண்டித்தார். எவ்வளவு கடுமையாய் என்பதற்கு ஓர் உதாரணம்:

சமீப காலத்தில் வெளியாகி யிருக்கும் தமிழ் நாவல்கள் இரண்டொன்றை நான் படிக்க நேர்ந்தது. அப்பப்பா! அவைகளின் பயங்கரத்தை வர்ணிக்க முடியாது. கொஞ்ச தூரம் படிப்பதற்குள் சாக்கடையில் விழுந்து புரள்வது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. ஆனால் சாக்கடையில் புரண்டால்கூடப் பாதகம் இல்லை. ஸ்நானம் செய்து சோப்புத் தேய்த்துக் குளித்துச் சுத்தமாகலாமே? உள்ளத்தை அசுத்தப்படுத்தும் அழுக்கு அவ்வளவு சுலபத்தில் போவதில்லை. நாலு நாள் இரவு தூங்கி எழுந்த பிறகுதான் மனம் மீண்டும் பரிசுத்தமானது போல் தோன்றியது. இளம் பிள்ளைகள் அல்லது இளம் பெண்களிடம் அந்தப் புத்தகங்களை எந்தக் கை கொடுக்கின்றதோ, அந்தக் கையை வெட்டி விடுவதுதான் தக்க தண்டனையாகும் என்று கூட நினைக்கலானேன்.

(ஆ. வி. 10-6-33 புத்தகாலயம் கட்டுரை)

தொடக்கத்தில் ''நல்ல'' நாவல்களை எழுதிய வடுவூர் துரைசாமி அய்யங்கார் பின்னர் போகப் போகக் ''கெட்ட'' நாவல்களை எழுதத் தொடங்கினார். அவருடைய தொடக்க கால நாவல்களைச் சிறுவனாய் இருக்கையிலும், பிற்கால நாவல்களைப் பெரியவரான பிறகும் கல்கி படித்தார். முதல் ரக நாவல்களில் ஒன்றான ''மேனகா'' திரைப் படமாக வந்தபோது, அதைக் கல்கி விமர்சனம் செய்தார். தான் சிறுவனாய் இருந்தபோது அந்த நாவலைப் படித்ததை நினைவிற் கொண்டு, ''ஸ்ரீமான் அய்யங்காரின் சிறந்த நாவல்களுக்குள்ளே தலைசிறந்தது மேனகாதான்'' என்று மெச்சினார். ''புத்தகத்தைக் கையிலெடுத்தால் முடிக்காமல் கீழே வைக்க மனம் வராது என்று சொல்கிறார்களே, அந்த ரகத்தை உண்மையிலேயே சேர்ந்த கதை. 'மேலே என்ன வருகிறது?' என்று மூச்சுப் போகும் பரபரப்புடன் கவனிக்கக் கூடிய கதா சந்தர்ப்பங்கள் நிறைந்தது.''

இப்படிப் பாராட்டிய கையோடு, அந்த ஆசிரியரின் தர நலிவைக் கண்டித்தும் ஒரு போடு போட்டார் கல்கி:

வடுவூர் கே. துரைசாமி அய்யங்கார் அவர்கள் ஆரம்பத்தில் எழுதிய ஐந்தாறு நாவல்களுடன் நிறுத்திக் கொண்டிருந்தால் தமிழ் வசன இலக்கியத்தைச் சிருஷ்டித்தவர்களுக்குள்ளே ஒரு சிறந்த ஸ்தானத்தைப் பெற்றிருப்பார். அவர் கடைசியாக எழுதிய ஐந்தாறு நாவல்களையாவது எழுதாமலிருந்திருக்கலாம். தமிழ்த்தாய்க்கு அத்தகைய அதிர்ஷ்டம் இல்லை. (ஆனந்த விகடன் 22-12-35)

மேலை நாட்டு நாவல்களில், எல்லாவற்றையும் உலைத்தும் குலைத்தும் எழுதுவதைச் சுட்டிக்காட்டி வாதிப்போருக்குக் கல்கி சொன்ன பதில்: ''கேவலம் மிலேச்ச பாஷையில் அவை வெளிவந்தால் தொலைந்து போகட்டும். நமது அருமைத் தமிழ் மொழியில் வேண்டாம்!''

(தொடரும்)

# உன்னைத்தான் தம்பி!



கதாநாயகனை ஆரம்பத்தில் கெட்டவனாகக் காட்டிவிட்டுப் பிறகு நல்லவனாக மாற்றிக் காட்டுவது புதுமை! பெரிய தொழிலதிபர் ஒருவரை நன்றாக ஏமாற்றி ஒரு கும்பலே பிழைக்கிறது. அவரது சொந்த சகோதரியின் மகன் ரவி அந்தக் கும்பலுக்குத் தலைமை தாங்குகிறான். இவர்களுடைய அட்டகாசம் அடங்கி எல்லாரும் நல்வழிப்படுதல் திரைக் கதையின் அடிப்படைக் கருத்து.

குடும்பத் தலைவராக வரும் அசோகன், பதற்றம் காட்டாமல் மிகவும் பதவிசாக நடித்திருக்கிறார். கண் பார்வை திரும்பியும், பார்வை இழந்தவர் போலவே நடித்த கட்டங்கள் பாராட்டுக்குரியவை; கூடவே, தேங்காய் சீனிவாசன், மனோரமா முதலியவர்களுக்கும் தனித்தனியே சபாஷ் போடுகிறேன்.

ஜெய்சங்கர் மிகவும் லாகவமாக நடித்திருக்கிறார். குழந்தை செல்வியின் கால் ஊனமுற்றதற்குத் தானே காரணமாயிருந்து விட்டதை நினைத்துக் கண்ணீர் விட்டுக் கலங்கியபோது மனமாற்றம் ஏற்படுகிறது; கூடவே அவர் நடிப்பிலும் ஒரு 'சீரியஸான' மாற்றம் ஏற்படுகிறது.

ஆரம்பத்தில் 'டிஸ்கொத்தே', ஆண்களுடன் நடனம் என்று சுற்றிக் கொண்டிருந்த கதாநாயகி, வில்லனால் தன் பெண்மைக்கே பங்கம் ஏற்பட இருந்த நிலையில் கதாநாயகனால் காப்பாற்றப்பட்ட போது மனம் திருந்துகிறாள். ஜெயசித்ரா இரு சந்தர்ப்பங்களிலும் நன்றாக நடித்திருக்கிறார்.

வில்லன் ஸ்ரீகாந்த் வழக்கம்போல்....

ஏ. சகுந்தலா பெயரிலேயே 'ஏ' இருக்கிறது. இன்னும் சொல்வானேன்?

காலில் ஊனம் ஏற்பட்டுவிட்ட ஒரு சிரமமான பாத்திரத்தை ஏற்று, பேபி சுமதி அருமையாக நடித்திருக்கிறாள். சிறந்த நடிப்புக்கு முதல் இடம் பெற்றிருப்பது ஒரு குரங்கு. படத்தைச் சிக்கல் இல்லாமல் முடித்து வைக்கிறது!

திரைக்கதையில் புதுமையாக எதையோ சொல்ல முயன்றிருக்கிறார்கள். ஆர். விட்டலின் டைரக்ஷனில் விசை இருக்கிறது. ஆயின் இசையில் பசையில்லை.

# இதயம் பார்க்கிறது



கவர்ச்சி, காதல், திகில் ஊட்டும் சம்பவங்கள், டிஷ்யூம் டிஷ்யூம் சண்டைகள், இவற்றுடன் கதையும் இருக்கிறது! அதிசயம்தான்! ஆரம்பத்திலிருந்து கடைசிவரையில் குருடனாகவே தத்ரூபமாக நடிக்கிறார் ஜெய்சங்கர். அத்துடன் வலது கை சுவாதீனம் இல்லாத பாத்திரம். அவ்வாறிருந்தும் வில்லன்களுடன் சண்டையிட்டிருப்பதைப் பாராட்டாமல் எப்படி இருப்பது? சினிமாவில் இப்படி நடக்கவில்லை என்றால் பிறகு எங்குதான் நடக்கும்? படத்தில் ஒரு புதுமை, ஜெய்சங்கருக்குக் கடைசி வரையில் பார்வை திரும்பவில்லை! "காதல் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவிலும் (புத்தக் காட்சி உள்பட) கைகொடுத்து"ப் படத்தை நல்லபடியாக முடித்து வைப்பவர் ஜெயசித்ரா. இளமைப் பொலிவோடு நீச்சல் உடையில் கவர்ச்சியையும் காட்டியிருக்கிறார். இந்தக் கவர்ச்சி போதாது என்று நினைப்பவர்களுக்கு ஜெயகுமாரி வேறு இருக்கிறார்! கவர்ச்சி என்பது ரொம்பப் பழைய சமாசாரம் என்றாலும் காதலி மேல்படிப்புக்காக அயல் நாடு போயிருக்கும்போது, கதாநாயகன் குருடன் என்பதைப் பயன்படுத்தி ஜெயகுமாரியை அவளாக நடிக்கச் செய்து வில்லன்கள் ஏமாற்றப் பார்ப்பது சற்றுப் புதுமையான விஷயம்தான்.

பெரிய பிரபுவான ஜெய்சங்கர் வீட்டில் அவருக்கு உதவியாக ஓர் ஆள்கூடக் கிடையாதா? காப்பி முதற்கொண்டு தட்டுத்தடுமாறித் தாமேதான் தயாரித்துக்கொள்ள வேண்டுமா? ஒருவேளை குருட்டு நடிப்பை உயர்த்திக் காட்டவோ, என்னவோ டைரக்ஷன் குருடாகிவிட்டது இங்கே!

கவிஞர் கண்ணதாசனின் "யானையின் பலம் எதிலே? தும்பிக்கையிலே!" என்ற கருத்துள்ள பாடல் காதுக்கு இனிமையாக இருக்கிறது.

பேபி இந்திரா, திரைக் கதையின் மர்ம முடிச்சுக்களை அவிழ்ப்பதில் பெரிதும் உதவியிருக்கிறாள். ஏ. ஜெகந்நாதன் டைரக்ஷன். கதை வசனம் பத்து. படம் என்றால் எதையும் பார்ப்பவர்கள் இதையும் பார்க்கலாம்.

-காந்தன்

நான் என்ன தவறு செய்தேன்? எனக்கு எதற்காக இந்தத் தாற்காலிக வேலை நீக்க உத்தரவு? எத்தனையோ மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்ளுகிறேன், விளங்கவில்லை. உங்களுக்கு விளங்கினால் சொல்லுங்கள், இல்லையேல் நீங்களும் உங்கள் மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்ளுங்கள்!

எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்? இதோ, ஒரு கப் தேநீர் தயார் செய்வதற்காக, இந்தக் காகிதங்கள் பற்றி எரிகின்றனவே, இதேபோல் ஒரு நாள் என் உள்ளமும் பற்றி எரிந்தது!

பொய் இல்லை, தபாலில் சேர வேண்டிய சில பல கடிதங்களை நான் கொளுத்துகிறேன் என்று புகார். புகார் உண்மைதான். ஆனால் நான் செய்தது தவறு என்கிறார்களே, அதைத் தான் என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

முழுக் கதையையும் கேட்டால்தான் உங்களுக்கு விளங்கும்.

என் பெயர் தம்பித்துரை. தபால்காரத் தம்பித்துரை என்றால் தெருக் குழந்தைகளுக்கு ஏகக் கொண்டாட்டம். 'மாமா! எனக்குக் கடிதாக! மாமா, எனக்குக் கடிதாக!' என்று சிட்டுக்களெனக் கலகல ஒலி எழுப்பிக் கொண்டு என்னைச் சூழ்ந்து கொள்ளும்.

'எப்போ வருவாரோ?' என்று வழிமேல் விழி வைத்திருக்கும் காதலிக்குக் காதலனின் வருகையை அறிவிக்கும் மகிழ்ச்சிக் கடிதம்; உத்தியோக நிமித்தம் வெளியூர் சென்று பிரிவுத் துயரை அநுபவிக்கும் அன்பனின் உள்ளக் கிடக்கையை ஏந்தி வரும் கடிதம்; பிள்ளையிடமிருந்து பணத்தோடு பாசத்தையும் கூட்டி வரும் கடிதம்; தாயின் உடல் நிலையை அறியத் துடிக்கும் மகனின் கடிதம்; 'உத்தியோக உத்தரவு வராதா?' என்று ஒற்றைக் காலில் நிற்பவனுக்கு நம்பிக்கை, அவநம்பிக்கை அளிக்கும் கடிதம்; ஏன்? சதையும் நகமுமாக இருந்தவர்கள் இறந்துபோன துயரச் செய்தியைத் தாங்கி வரும் கடிதம்—என்று இப்படியாக எத்தனை எத்தனையோ கடிதங்களை 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று எடுத்துப் போய்ப் பட்டுவாடா செய்பவன் நான்.

இருந்தாலும் சின்னஞ் சிறிசுகளிடம் பாசத்தை வளர்த்துக் கொண்டேன். காரணம், கல்யாணம் ஆகிப் பல ஆண்டுகள் ஆகியும் குழந்தைச் செல்வம் இல்லாமற் போகவே, தெருக் குழந்தைகளிடம் ஒரு பாசம் ஊறியது. அவர்களை மகிழ்விப்பதற்காக ஒரு காரியம் செய்தேன். ஆம், தெருவிலே வீசி எறியப்பட்ட உதவாக்கரைக் கார்டுகளுக்கும் கவர்களுக்கும் ஓர் உபயோகம் கண்டுபிடித்தேன். அவற்றைப் பொறுக்கிச் சென்று 'ஆனா, ஆவன்னா'கூடப் படிக்காத குழந்தைகளுக்கு, 'இந்தா, உனக்குக் கடிதாக! உங்க மாமா எழுதியிருக்கிறார்!' 'இந்தா, உனக்குக் கடிதாக! உங்க தாத்தா எழுதியிருக்கிறார்' என்று கூறிக் கொடுப்பேன். குழந்தைகளுக்கு என் அந்த நாடகம் பிடித்துப் போகவே, அவை என்னிடம் ஒட்டிக் கொண்டு விட்டன.

அவற்றிடம் நான் காட்டும் அன்பைக் கண்டு ஆண்டவன் நெகிழ்ந்து விட்டான். எனக்கு என்று ஒரு செல்வத்தைத் தந்தான். அவனுக்கு நான் என்ன பெயர் வைத்திருப்பேன், நீங்களே சொல்லுங்களேன்! செல்லம் பள்ளி செல்லும் அளவுக்கு வளர்ந்ததும், அவளிடமும் இதே விளையாட்டை விளையாடலானேன். 'இந்தா, உனக்கு ஒரு கடிதாக!' என்றேன். ஒரு நாள் அவள் கேட்டாள்: 'எனக்கு இந்தக் கடிதாக யாரு எழுதியிருக்காங்க?' 'உன்னைக் கல்யாணம் கட்டிக் கொள்ளப் போகிற பொடிசு!' என்றேன், விளையாட்டாக!

# கொதிக்கும் உள்ளத்தில் கூடேறிய பூ!



ரா. வீழிநாதன்

இரண்டொரு நாட்கள் கழித்து, ஒரு கார்டை என்னிடம் கொடுத்து, 'இதை அவருக்குத் தபாலில் சேர்த்துவிடு!' என்றாள்.

'யாருக்கு?'

'வேறு யாருக்கு? என்னைக் கல்யாணம் கட்டிக்கப் போகிற அவருக்கு!'

எனக்கும் அவள் அம்மாவுக்கும் வாய் எல்லாம் பல்! 'என்ன சூடிகை!' என்று அகமகிழ்ந்து போனோம். அவள் அம்மா முட்டி நெரித்துத் திருஷ்டியே கழித்தாள்!

பாராட்டிச் சீராட்டி வளர்த்த அவளைக் கல்லூரி புகுமுக வகுப்பில் சேர்த்தபொழுது, எனக்கு நானே சொல்லிக் கொண்டேன், நாம் பத்து ரூபாய்ப் பணம் கட்டி நாலெழுத்துப் பரீட்சைகூடப் பாஸ் பண்ணவில்லை. இவளையாவது பட்டப் படிப்பு படிக்க வைக்க வேண்டும் என்று !

அன்று நான் வேலைக்குப் போகவில்லை. செல்வம் எங்கோ வெளியே போயிருந்தாள். அவள் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. 'இவளுக்கு யார் கடிதம் எழுத இருக்கிறார்கள்? யாராவது வகுப்பு மாணவியாக இருக்கலாம்!' என்று எண்ணினேன். 'அப்படி என்ன எழுதியிருக்கப் போகிறாள்?' இந்தக் கேள்வி அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்க்கச் செய்து விட்டது. பிரித்துப் பார்த்தவனுக்குத் தலையைச் சுற்றியது.

இந்தக் காலத்துக் கல்லூரிகள் கல்வி புகட்டுவதைக் காட்டிலும் காதலை அல்லவா அதிகமாகப் புகட்டுகின்றன?

ஆமாம், அது செல்லத்துக்கு வந்த ஒரு காதல் கடிதம். அப்படியே தன் உள்ளத்தை விண்டு வைத்திருந்தான்; காவியம் சமைத்து அதை ஓவியமாக்கியும் காட்டியிருந்தான் அதை எழுதியவன்.

முதலில் அந்தக் கடிதம் நெருஞ்சி முள்ளாக இடறினாலும், யோசித்துப் பார்த்தபொழுது, 'இதில் என்ன தவறு? வயதுவந்த குழந்தைகள் இந்தக் காலத்தில் தங்கள் வாழ்க்கையைத் தாங்களே வளமாக்கிக் கொள்ள வழி தேடிக் கொள்ளுகின்றனர். இதற்குப் பெற்றோராகிய நாம் குறுக்கே நிற்கக் கூடாது. பையன் நல்லவனாயிருந்து விட்டால், இருவரையும் இணைத்து முடிபோட்டுவிட வேண்டும்!' என்ற முடிவுக்கே வந்தேன்.

கடிதங்களில் காதலை வளர விட்டவாறே, பையனைப் பற்றிப் புலனாய்வில் இறங்கினேன். நான் அறிந்த விவரங்கள் பையனைப் பற்றி நல்ல முடிவுக்கு வர விடவில்லை. அவனிடம் வேண்டாத பல தீய குணங்கள் படிந்திருப்பது தெரிந்தது. எனவே, தொடர்பை மேலும் வளர விடாமல் துண்டிக்க முனைந்தேன். அவன் கடிதங்களை அமுக்கினேன். அப்படியும் அவர்கள் காதல் குன்றிமணி அளவுகூடக் குறையவில்லை என்பது தெரிந்தது. எனவே, பெண்ணிடமே நேருக்கு நேர் மோதினேன்; அவன் தீய குணங்களையெல்லாம் எடுத்து உரைத்துத் தொடர்பைக் கத்தரித்துக் கொண்டு விடுமாறு கூறினேன். பலன் தரவில்லை. காதலுக்குத்தான் கண் இல்லையே! அவள் பிடிவாதமாக இருக்கவே, நான் கண்காணிப்பை வலுப்படுத்தினேன். இத்தனைக்கும் 'டேக்கா' கொடுத்துவிட்டு

# கடிதத்தில் கொதித்த 'சிங்கிள் டீ'!

லூதியானா, செப் 8— பஞ்சாபில் லூதியானா நகரில் உள்ள தபால் நிலையத்தின் பியூன் ஒருவர் தினசரி ...ரில் சிங்கிள் டீ



**கல்கி அக்டோபர் 20 ஒருமைப்பாடு சிறப்பிதழ்**

அவள் ஒரு நாள் அவனோடு ஓடிவிட்டாள். அந்தத் துயரத்தில் என் மனைவி படுத்த படுக்கையாகி ஒரு நாள் கண்களையும் மூடிவிட்டாள்! எனக்கு உலகமே அஸ்தமித்துவிட்டாற் போல் ஆயிற்று! ஆயினும் உள்ளத்தின் ஒரு மூலையில், என் பெண்ணின் அதிருஷ்டம், அந்தப் பையன் திருந்தி நல்லவனாகிவிடக் கூடாதா என்று ஒரு நப்பாசை! அதே உள்ளம், நான் அமர்ந்திருக்கும் வேலையில் இப்படியும் என்னைக் குத்தியது:

'வினை விதைத்தவன் நீதானே ? குழந்தைகளுக்கு இப்படிக் கடிதங்கள் வழங்கி ஆசையைக் காட்டினாயே ! இது போல் எத்தனை குடும்பங்களில் இத்தகைய நிகழ்ச்சிகள் நடந்திருக்குமோ ?'

'இது தொட்டில் பழக்கம்; தபால்காரனாயிருக்கும் வரை நம்மை விட்டுப் போகாது!' என்று எண்ணம் ஏற்படவே, நாற்பத்து மூன்றாவது வயதில் முனைந்து படித்தேன். பதினைந்து ரூபாய் கட்டி நாலெழுத்துப் பரீட்சையைப் பாஸ் செய்தேன். அப்புறம் அதிகாரிகளை வேண்டி இந்த 'ஸார்ட்டர்' வேலையைப் பெற்றேன்.

இந்த 'ஸார்ட்டர்' வேலை இருக்கிறதே. இதில் அநுபவம் ஏற ஏறக் கைகளுக்குக் கனம் தெரியும்; கனத்துக்கு ஏற்பத் தபால் பில்லைகள் ஒட்டியிருக்கின்றனவா, இல்லையா என்பதும் தெரிந்துவிடும். பெரும்பாலும் தவறுவதில்லை. அதே போலத்தான் இந்தக் கண்களும்? உறைக்குள் என்ன வைத்திருப்பார்கள் என்பதையும் ஊடுருவி நோக்கி அறிந்து கொண்டு விடும் !

என் அநுபவப்பட்ட கண்கள் இன்னொரு வகையிலும் நிட்சண்யம் பெற்றிருந்தன. இதற்குள் காதல் கடிதம் இருக்கும் என்று நான் தீர்மானித்தால் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் தவறுவதில்லை. என் பெண்ணின் கதி மற்றவர்களுக்கும் வந்துவிடக் கூடாதே என்ற எண்ணத்தில் அவற்றைத் தனியாக 'ஸார்ட்' செய்து வைத்துவிடுவேன்; அன்றையக் கட்டில் சேர்க்க மாட்டேன்! டீ தயாரிக்க எரித்துவிடுவேன். அதில் காதல் கடிதம் அல்லாத வேறு சில கடிதங்களும் சில சமயம் சேர்ந்துவிடும்தான்.... போனால் போகட்டுமே! ஒரு பெண்ணின் வாழ்வு பலியாகாமல் காக்க ஏழெட்டு வர்த்தகத் தொடர்புள்ள கடிதங்களோ அல்லது வேறு செய்திகளைத் தாங்கிய எட்டுப் பத்துக் கடிதங்களோ பாழானால் என்ன, குடியா முழுகிவிடும் ?

என் பெண்ணின் கதி என்ன என்றுதானே கேட்கிறீர்கள் ? நான் போட்ட கணக்குப்படி அந்தப் பிள்ளையாண்டான் அவளை இரண்டு குழந்தைகளுக்குத் தாயாக்கி விட்டு, 'அம்போ' என்று விட்டுவிட்டுப் போய்விட்டான். ஆறு வருஷங்கள் கழித்து எனக்கு இது தெரிய வரவே, அவளை அழைத்து வரப் போனேன். அவள் என்ன சொன்னாள், தெரியுமா ? 'அன்று உங்கள் சொல்லைக் கேட்காமல் வந்தவள்; இன்று உங்கள் சொல்லைக் கேட்டு வந்தால் எனக்கு ஏது மரியாதை? அவர்தான் அறிவு கெட்டுப் போனார் என்றால், நானுமா போக வேண்டும் ? இந்த இரண்டு சிறிசுகளையும் ஆளாக்கி அவர் குடும்பத்தை விளங்க வைக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்வேன்! என் கவலையை விட்டொழியுங்கள்!' என்றாள்.

நான் சந்தேகப்பட்டுக் கட்டில் சேர்க்காமல் விட்ட கடிதங்களை எடுத்து வந்து, சிலவற்றை எரித்துத் தேநீர் தயாரிப்பேன். சிலவற்றை நீராவியில் காட்டிப் பிரிப்பேன். உள்ளுறை விஷயங்களில் ஒரு கண்ணோட்டம் விடுவேன். பெரும்பாலும் என் குறி தப்புவதில்லை. இளம் உள்ளத் துடிப்பு அவற்றில் தலைதூக்கி நிற்கும். சூடு கண்ட நான் அவற்றை இலேசில் தபாலில் சேர்க்கமாட்டேன். டீ கொதிப்பது நெருப்பினால் அல்ல, என் உள்ளக் கொதிப்பினால் அது சூடேறுகிறது என்று எனக்குத் தோன்றும்.

இப்படிப்பட்ட கடிதங்களில் யாருடைய கடிதமோ போய்ச் சேராமற் போகவே, இத்துறை அதிகாரிக்குப் புகார் செய்திருக்கிறார்கள். அவரும் சோதனையை மேற்கொண்டிருக்கிறார். நான் தினமும் அலுவலகத்தில் தேநீர் தயாரித்து அருந்துவதைக் காணச் சகிக்காத சிலர் இதை மேலதிகாரிக்குத் தெரிவித்திருக்கிறார்கள். அவரும் என்னைக் கையும் மெய்யுமாகப் பிடித்துவிட்டதாக அகமகிழ்ந்து போகிறார். நான் கொளுத்தியவை குப்பைக் காகிதம்தான் என்று என்னால் நிரூபிக்க முடியாது. என் பெண்ணின் வாழ்க்கை பாழானதால் என் அறிவு பாதிக்கப்பட்டிருப்பதாகவும் எனக்கு மனத்தத்துவ ரீதியில் சிகிச்சை தேவை என்றும்கூடப் பேசப்படுகிறது.

அவ்வளவு ஏன்? நான் குற்றவாளிதான். ஒப்புக் கொள்கிறேன். ஆயினும் எனக்கு ஒரு மகிழ்ச்சி. விசாரணையின் போது நான் அமுக்கிய பல கடிதங்களையும் எடுத்து அவர்கள் முன் போடப் போகிறேன். அப்பொழுது ஒரு ரகசியம் அம்பலமாகப் போகிறது! என்னைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப் போகிறாரே, அந்த அதிகாரியின் மகளையுமே பொய்க் காதலிலிருந்து நான் தப்புவித்திருக்கிறேன் என்று ! சட்டத்தின் பிடியில் சிக்க வைத்து எனக்குத் தண்டனை வாங்கி அளித்தாலும் அவர் உள்ளூற என்னை வாழ்த்துவார்!

'எப்படி அவ்வளவு நிச்சயமாய்க் கூறுகிறாய்?' என்றுதானே கேட்கிறீர்கள்?

அவர் பெண்ணுக்குக் காதல் கடிதம் எழுதி மயக்கியவனே என் பெண்ணின் கணவன்தான் ஐயா !

# எழிலரசி-
# ராய்ப்பூர்
# இளவரசி
# யாரோ?

'மிஸ் ஏஷியா 1973'

சிங்காரி, ஒய்யாரி, சகம்நாடும்
அழகுராணி, இங்கிதமாய் எழில்
சேர்க்கும் டெபிலெஸ்டு ரூபியோ
துணியிலே மங்கை அணிந்திடுவாள்
மாக்ஸியும் பிளவுசும்.
டெபிலெஸ்டு ஃபுல்வாயில் புடவை
பூமேனியில் உறவாடும் புத்தெழில்
சேர்க்கும்.
டெபிலெஸ்டு புட்டா அவளுக்குத்
தேஜஸ் இனித்திடும்.
தேடி அணிந்திடுவாள் வாயில்கள்,
ரூபியா, ப்ரின்டட் லான்கள்,
ஸ்க்ரீன் ப்ரின்டட் பாப்லின்கள்...
அழகு ராணி, இவற்றில் எதனை
அணிந்தாலும் இவளே
ராய்ப்பூர் இளவரசி'
ராய்ப்பூர் இளவரசியாய் விளங்க
வாய்ப்புண்டு உங்களுக்கும்!
* தாரா டோன்கேகர—
'மிஸ் ஏஷியா 1973'



**ராய்ப்பூர் மில்ஸ்**
ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



**லால்பாய் க்ருப் துணிகள்**

CMLB.30.162 R TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எஸ். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு சென்னை-1, 76, கிழக்கு மாரட் தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1. M/S. ஜுவலீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.



## கொள்ளைக்காரப் பறவை!

ஹவாயிலிருந்து ஆஸ்திரேலியா வரையுள்ள பசிபிக் கடலில் உள்ள தீவுகளைத் தங்கள் வாழ்விடமாகக் கொண்டுள்ளன இப்பறவைகள். தங்கள் வாழ்நாளின் பெரும் பகுதியை வானத்தில் பறந்து கொண்டே கழிக்கும். வானளாவ உயர எழும்பி இப்பறவை பறந்து செல்வது கண்கொள்ளாக் காட்சி. நீண்ட இறக்கைகள் பல மணி நேரம் தொடர்ந்து செயலாற்ற முடியாத காரணத்தால், இதன் நீண்ட பிளவுபட்ட வால் பகுதி திறந்தும் மூடியும் 'கத்தரிக்கோல்' போன்று செயல்பட்டு வானில் இப்பறவை இறக்கைகளை அசைக்காமலேயே இருக்க உதவுகிறது.

கொள்ளைக்காரப் பறவை தான் வாழும் இடத்தை விட்டு இரை தேட வெகு தூரம் பறந்து செல்வதில்லை. கடல் பறவைகள் கொண்டு செல்லும் இரைகளைக் கொள்ளையடிக்க அப்பறவைகளை வழி மறித்துச் சண்டையிடும். இதனுடைய தாக்குதலைத் தாங்க முடியாது பெரும்பாலும் அவை இரைகளை இப்பறவைக்குச் சமர்ப்பணம் செய்துவிடும். பறக்கும் போதே வானிலேயே அந்த இரைகளைக் கவ்விக் கொள்ளைக்காரப்பறவை தன் உணவாகக் கொள்ளும்.

இனப் பெருக்க காலத்தில் ஆண் பறவை ஒரு பாதுகாப்பான இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு குச்சிகளை நட்டுத் தன் உரிமையை நிலைநாட்டிய பின் தன் கழுத்துப் பகுதியில் அழகிய சிவப்பு நிறப் பை போன்ற அமைப்பை உடைய பாகத்தைப் பலூன் போன்று ஊதிக் கம்பீரமாக நிற்கும். இச்செய்கை பெண் பறவையை வசீகரித்துத் தன்னைக் கணவனாக ஏற்றுக்கொள்ளச் செய்யத்தான். சில சமயம் தொந்தரவு தாங்காது பெண் பறவை ஆண் பறவையின் கழுத்துப் பையைக் கொத்திவிடும். இச்செய்கையினால் காற்று வெளியேற்றப்பட்டு, கழுத்துப் பை சுருங்கி ஆண் பறவை வெட்கத்துடன் செயலற்று நிற்கும்!

- அந்தோனிபேபின்

## நோயாளியின் பொறுமை!



அண்மையில் நண்பர் ஒருவருடன் டாக்டர் வீட்டுக்குச் சென்றேன். நிறையப் பேர் உட்கார்ந்திருந்தனர். நண்பனும் உட்கார்ந்து கொண்டான். என் கண்களில், அந்த அறையில் மாட்டப்பட்டிருந்த போர்டில் எழுதியிருந்த வாசகம் பட்டது: ''டாக்டர் உள்ளே இருக்கிறார், பொறுமையாக இருக்கவும்'' என்பதை "Doctor is Inside; Be Patient" என்று எழுதி யிருக்கிறார்கள்.!

நண்பனும் நானும் சட்டென்று சிரித்துவிட்டோம். ஆரோக்கியமான சிரிப்புத்தானே!

- பாமாப்ரியா

| | | | |
|---|---|---|---|
| 4 | 3 | 10 | 12 |
| 6 | 11 | 8 | 9 |
| 1 | 7 | 2 | 5 |

இந்த எண்களை வரிசைப்படி 1 முதல் 12 வரை ஒரு பென்சிலால் தொட்டுக் கொண்டே வாருங்கள். எவ்வளவு நேரம் ஆகிறது? 9 வினாடி என்றால் உங்கள் பார்வை வேகம் சுமார்.

7 வினாடி - வெரிகுட்; 5 வினாடி - எக்செலண்ட். பார்வை வேகம் நன்றாக இருக்கிறது. 9 வினாடிக்கு மேல் ரொம்பவும் நிதானம், வேகம் வேண்டும்.

நன்றி: கதோலிக் டைஜெஸ்ட், - பாலி

## மூக்குக் குறையான விநாயகர்!

கோவில்பட்டியிலிருந்து எட்டையபுரம் செல்லும் வழியில் இரண்டாவது மைலில் இடைக்குளம் என்னும் கிராமம் உள்ளது. இங்கு அதிசய விநாயகர் கோயில் ஒன்று உள்ளது. விநாயகப் பெருமானது திருவுருவத்தில் துதிக்கை குறைவாகக் காணப்படுவதால் ''மூக்குக் குறையான விநாயகர்'' என்று சொல்வர். இது சம்பந்தமாகக் கதை ஒன்றும் கூறுவர்.

சுமார் 150 வருடங்களுக்கு முன்னர் இப்பகுதியில் திருடர்கள் பயம் அதிகம். ஒருநாள் திருடர் கூட்டத்தினர் தாங்கள் அன்றிரவு கொள்ளையடித்துக் கிடைக்கும் பொருள்களில் பாதியைக் காணிக்கை அளிப்பதாக வேண்டிச் சென்றனர். அன்று இரவு அத்திருடர்கள் கைது செய்யப்பட்டுச் சிறைத்தண்டனை அடைந்தனர்.



தண்டனைக் காலம் முடிந்து வெளியே வந்ததும் இந்த விநாயகர்தான் தங்களை அன்று திருடும்பொழுது அகப்பட்டுக் கொள்ள வைத்தது எனக் கோபப்பட்டுக் கையிலிருந்த சில ஆயுதங்களால் விநாயகர் சிலையைத் தாக்கினார்கள். துதிக்கை உடைந்து குறைபட்டது. அன்றிலிருந்து இந்த விநாயகர்பெருமான் ''மூக்குக் குறையான விநாயகர்'' என்ற பெயர் பெற்றார். தற்பொழுது அப்பெயர் மருவி ''மூக்குறை விநாயகர்'' என வழங்குகிறது.

இந் நிகழ்ச்சிக்குப் பின்னர் இப்பிள்ளையார் கோயிலின் மிக அருகிலுள்ள புளிய மரத்தின் தாழ்ந்த கிளையிலிருந்து ஓர் அபூர்வ உறுப்புத் தோன்ற ஆரம்பித்தது! சில வருடங்களில் இது குட்டை வடிவில் விநாயகரின் துதிக்கை போன்ற உருவை அடைந்தது!

— உ. இராமநாதன்

CHAITRA-BLS-47 TAM

# சமையலறைக் குழாயில் அடைப்பா ?

# எக்ஸ்பெல்

**எக்ஸ்பெல் அதை நொடியில் நீக்குகிறது.**

**அடைப்புமில்லை!**
**தொல்லையுமில்லை.**

எண்ணெய்ப் பசையும்
ஆகார துகள்களும்
சமையலறைக் குழாயை
அடைத்து அளவிலா
தொல்லையைத் தருகின்றன.
கொதிக்கும் நீரில்
எக்ஸ்பெல் கலந்து உபயோ
கித்தால் குழாய் முற்றிலும்
துப்புரவாகிறது.









பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட.

# திருடர்கள்

ர.சு.நல்லபெருமாள்

## 12. எழுத்துத் துரோகம்

நீதிபதி நாககந்தரம் வந்த பிறகு விருந்து களை கட்டியது. கோமளம் மிகுந்த உற்சாகத்தோடிருந்தாள். நவரசம் பத்திரிகையின் ஆசிரியர் சந்தானம், தம்முடைய பார்வையை அடிக்கடி கோமளத்தின் மீது செலுத்துவதைக் கட்டுப்படுத்திக் கொண்டார். இருந்தாலும் அவ்வப்போது அவருடைய கட்டுப்பாட்டையும் மீறி, அவருடைய பார்வை, அவள்மீது விழுந்தபோதெல்லாம் கடைக்கண்ணால் நாககந்தரத்தையும் கவனித்துக் கொண்டார்.

''நீங்கள் என்ன இவ்வளவு குறைவாகச் சாப்பிடுகிறீர்கள்?'' என்று வியப்புடன் நாககந்தரத்தைப் பார்த்துக் கேட்டாள், கலெக்டரின் மனைவி, கனகா.

''என்னுடைய அளவே இவ்வளவுதான். இதுகூட அதிகம்தான்'' என்றார் நாககந்தரம்.

''இவ்வளவு குறைவாகச் சாப்பிட்டு எப்படி....?''

''நம்முடைய உடலுக்கு இந்த அளவே அதிகம்தான். விவரம் தெரியாமல் சாப்பிட்டுக்கொண்டிருப்பதால்தான் நாட்டில் உணவுப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. உண்மையில் உடலுக்கு எவ்வளவு தேவையோ அதைவிட இருபது மடங்கு அதிகமாகச் சாப்பிட்டே பழகி, வயிற்றைப் பெரிதாக்கிக் கொண்டிருக்கிறோம்'' என்றார் நாககந்தரம்.

''சிலர் சாப்பிடுவதைப் பார்த்தால் பயமாயிருக்கும். மலை போல் சோற்றைக் குவித்துக்கொண்டு, கவளம் கவளமாக விழுங்கிச் சாப்பிடுவார்கள்'' என்றார் போலீஸ் அதிகாரி.

''அப்படிச் சாப்பிட்டுப் பழகி விட்டார்கள். அவர்கள் சாப்பிடுவதில் இருபதில் ஒரு பங்குதான் உடலில் சேரும். மற்றவை எல்லாம் கழிவுப் பொருளாக வெளியேறி விடும். இப்படிச் சாப்பிடுபவர்கள் எல்லாரும் நல்ல உர உற்பத்தியாளர்கள்'' என்று நாககந்தரம் சொன்னதும் எல்லோரும் சிரித்தார்கள்.

சந்தானத்துக்குச் சங்கடமாயிருந்தது. இன்னும் கொஞ்சம் தேங்காய்ப் பால் குழம்பு விட்டுச் சாதம் சாப்பிட வேண்டும் என்ற ஆசையைக் கட்டுப்படுத்திக் கொண்டார்.

''என்ன எடிட்டர் சார், நீங்கள் பேசாமலிருக்கிறீர்கள்? நாட்டின் உணவுப் பொருள் விளைச்சல் எப்படி வீணாகிறது என்பதைப் பற்றிய சிந்தனையா?'' என்று சந்தானத்தையும் பார்த்து மெதுவாகத் தணிந்த குரலில் கேட்டாள் கனகா. அவளைப் பார்த்துப் புன்னகையை வீசினார், சந்தானம். அவளுடைய அலங்காரக் கோலம் வேடிக்கையாக இருந்தாலும், பன் போல உப்பியிருந்த கன்னங்களும், கொழு கொழுவென்றிருந்த உடலமைப்பும் பார்ப்பதற்குக் கவர்ச்சியாகவே இருந்தன.

''எல்லாரும்தான் பேசுகிறீர்களே. நான் பேச என்ன இருக்கிறது?'' என்றார் சந்தானம்.

''நாங்கள் பேசுவதை வைத்துக் கொண்டு ஒரு கதையே எழுதுவீர்கள்'' என்றாள், கனகா. சந்தானத்தின் கண்கள் அவளைக் கூர்ந்து நோக்கின. அவளை அவ்வளவு அருகிலிருந்து அன்றுதான் பார்த்தார். அதற்கு முன் பல சந்தர்ப்பங்களில் அவளைச் சந்தித்திருக்கிறார். அப்பொழுதெல்லாம் அவளுடைய ஒப்பனையை ஒரு வேடிக்கையாகப் பார்த்திருந்தாரே தவிர, அவளிடமும் கொஞ்சம் கவர்ச்சி உண்டு என்பதை அன்றுவரை அவர் உணரவே இல்லை. அவருடைய பக்கத்தில் அவள் அமர்ந்தபோதே அவளிடமிருந்து இனிமையான ஒரு மணம் வந்ததை அறிந்து கொண்டார்.

''வெளி நாட்டிலிருந்து செண்ட் கிடைத்திருக்கிறது போலிருக்கிறது'' என்றார்.

''வாசனை நன்றாக இருக்கிறதா? பாரிஸில் என் தங்கை இருக்கிறாள். அவள் அடிக்கடி அனுப்பி வைப்பாள்'' என்றாள் கனகா.

''வாசனை பிரமாதம். இந்த மாதிரி சுகமான வாசனை உள்ள செண்ட், இங்கே கிடைக்காது. உங்கள் தங்கையிடம் எனக்கு ஒரு பாட்டில் செண்ட் சிபாரிசு செய்ய முடியுமா?'' என்று கேட்டுவிட்டுக் கடைக்கண்ணால் மற்றவர்களைக் கவனித்தார் சந்தானம். மற்றவர்கள் ஏதோ பேச்சில் ஈடுபட்டிருந்ததையும், தம்மைக் கவனிக்கவில்லை என்பதையும் அறிந்து கொண்டார்.

''என்னிடம் இருக்கிறது. நானே உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன்'' என்றாள் கனகா.

''தாங்க்ஸ்'' என்று கூறி அவளை உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வை, நன்றியைத்



தெரிவித்ததா அல்லது தன்னுடைய அழகை ரசித்ததா என்பது தெரியாமல் தவித்தாள், கனகா.

''நீங்கள் ஒன்றும் எழுதுவதில்லையே?''— சந்தானம் கேட்டார்.

''எழுத வேண்டும் என்று ஆசைதான். ஆனால் எழுதத் தெரிய வேண்டுமே'' என்றாள்.

''ஆசை இருந்தால் போதும். எழுத்து தானாக வந்துவிடும்.''

''அப்படியா?'' — வியப்புடன் கேட்டாள்.

''உம்.''

''ஒரு கதை எழுதி வைத்திருக்கிறேன்'' என்றாள் சிறிது நாணத்துடன்.

''ஓ.... அனுப்பி வையுங்களேன். ''நவரச''த்தில் போடுகிறேன்.''

''நன்றாக இருக்குமோ என்னவோ'' என்று தயங்கினாள்.

''பரவாயில்லை. நான் எடிட் செய்து கொள்கிறேன்.''

''அப்படியானால் அனுப்பி வைக்கிறேன். கதை பிரமாதமில்லை'' என்று கூறிவிட்டு, கதையின் கருத்தைச் சொன்னாள். ஏதோ குழந்தைகளுக்கு நீதிக் கதை சொல்லுவது போலிருந்தது. பொறுமையுடன் சந்தானம் கேட்டுக் கொண்டிருந்தார். அவருடைய கவனம், உண்மையில் அவளுடைய புருவங்களின் நெளிவிலும், உதடுகளின் அசைவிலும் பார்வையின் போக்கிலும்தான் லயித்திருந்தது.

''கதை எப்படி? பரவாயில்லையா?'' என்று அவள் குழந்தையைப் போல் குழைந்து கொண்டு கேட்ட பிறகுதான் அவர் சுய நினைவை அடைந்தார்.

'' நன்றாயிருக்கிறதே .... அனுப்பி வையுங்கள்'' என்றார். அவள், நன்றிப் பெருக்குடன் அவரைப் பார்த்தாள். ஒரு பெண்ணிடமிருந்து நன்றியோடு கிடைக்கும் குழைவான அந்தப் பார்வைதான் அவருக்குத் தேவை. அதை ஆதாரமாக வைத்துக் கொண்டு அவர் தம்முடைய கனவுகளை நிறைவேற்றத் தொடங்கி விடுவார்.

அந்தப் பார்வையில் எந்த இடத்தில் பலவீனம் இருக்கிறது என்பதை ஆராய்வார். கொஞ்சம் பலவீனம் இருந்தாலே போதும், அவருடைய வெற்றிக்கு. இது அவருக்கே கைவந்த கலை. ஆனால், கோமளத்தின் விஷயத்தில்தான் இன்னும் அவரால் எந்த முடிவுக்கும் வர இயலவில்லை. வெற்றிப் பாதையில் நடை போடுகிறோமா அல்லது ஏமாந்து கொண்டிருக்கிறோமா என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினார். கோமளத்துக்காக அவர் எவ்வளவோ உதவி செய்தார். இன்று கோமளத்தைத் தெரியாத வாசகர்கள் இருக்க முடியாது. 'நவரச'த்தில் அவளுடைய படத்தை அச்சிட்டுப் பிரபலப்படுத்தினார். அப்போதெல்லாம் அவளுடைய நன்றி கலந்த பார்வையையும், பேச்சையும் தம்முடைய கணக்குப்படி கணித்துப் பார்த்தார். விடை சரியாகக் கிடைக்கவில்லை. ஆனால் தம்முடைய மனோரதம் எப்படியும் நிறைவேறும் என்ற நம்பிக்கையை மட்டும் அவர் இழக்கவில்லை.

''நவரசம்'' பத்திரிகையின் ஆசிரியராகச் சந்தானம் பொறுப்பேற்றுக் கிட்டத்தட்ட எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. பதினாயிரம் பிரதிகளே விற்றுக் கொண்டிருந்த அந்தப் பத்திரிகையின் விற்பனை, இப்போது அறுபதினாயிரத்தை எட்டிவிட்டதற்கு முழுப் பொறுப்பு சந்தானத்தினுடையதுதான். அதனால் பத்திரிகையின் அதிபருக்குச் சந்தானத்தின் மீது மிகுந்த நம்பிக்கை விழுந்துவிட்டது. ஆரம்ப காலத்தில் ''நவரசம்,'' ஒரு தரம் வாய்ந்த இலக்கியப் பத்திரிகையாக இருந்தது. அதிபருக்கு ஓரளவுலாபமும் கிடைத்துவந்தது. அப்போது சந்தானம் வேலையற்றுத் திரிந்து கொண்டிருந்தார். எப்போதோ ஒரு பத்திரிகையில் உதவி ஆசிரியராக வேலை பார்த்த அனுபவம் இருந்தது. அந்தப் பத்திரிகை அலுவலகத்திலிருந்த ஒரு பெண் டைப்பிஸ்டிடம் ஒழுக்கக் குறைவாக நடந்துகொண்டதற்காக வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அதற்குப் பிறகு வேறு எந்தப் பத்திரிகையிலும் சந்தானத்துக்கு வேலை கிடைக்கவில்லை. அவருடைய எழுத்தையும் எந்தப் பத்திரிகையும் பிரசுரிக்கத் தயாராயில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில்தான் குதிரைப் பந்தய மைதானத்தில் ''நவரசம்'' பத்திரிகை அதிபர் பாண்டுரங்கனின் நட்புக் கிடைத்தது. பாண்டுரங்கன் அவரை நம்பினார். ''நவரசம்'' பத்திரிகைப் பொறுப்பைச் சந்தானத்திடம் ஒப்



படைத்தார். பத்திரிகையின் விற்பனை அறுபதினாயிரத்தை எட்டியது. இதைச் சாதிக்க, சந்தானம் சங்கடம் ஏதும் படவில்லை. நல்ல இலக்கியங்களுக்கு ''நவரசத்தில்'' இடம் கொடுப்பதை நிறுத்தினார். கதைகளுக்காகச் சிறந்த எழுத்தாளர்களை நாடாமல் நியூவேவ் என்ற பெயரில் ஆபாசங்களை எழுதத் தெரிந்த சிலரை மட்டும் பயன்படுத்திக் கொண்டார். முதல் அட்டையிலிருந்து கடைசி அட்டை வரையில் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்குப் பெண்களின் புகைப்படங்களை அச்சிட்டார். கூடியவரை சினிமா நட்சத்திரங்கள், சில்லறை நடிகைகளின் படங்களையே தேர்ந்தெடுத்தார். எந்த மாதிரிக் கதையானாலும் பெண் கதாபாத்திரங்களின் படங்களில் சேலை, இடையையும் நெஞ்சையும் மறைத்து விடாதபடி பார்த்துக் கொண்டார் — சந்தானம் செய்தவை இவ்வளவுதாம். விற்பனை அறுபதினாயிரத்தை எட்டிவிட்டது. சீக்கிரத்தில் லட்சத்தை எட்டிவிடும் என்ற நம்பிக்கையில் இருந்தார்.

''நவரசம்'' பத்திரிகையின் கௌரவத்தில் அக்கறை கொண்டிருந்த ஒருசிலர் பாண்டுரங்கனிடம் பத்திரிகையின் தற்போதைய தரத்தைப் பற்றிச் சொன்னார்களாம். அதற்குப் பாண்டுரங்கன் சொன்னாராம்: ''என்னய்யா பெரிய தரம்? அறுபதினாயிரம் பிரதிகள் விற்பனையாகிறது. உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் நீங்கள் படிக்க வேண்டாம். இந்த மாதிரி தரம்தான் வேண்டுமென்று வாசகர்கள் அலைகிறார்கள். படிக்கட்டுமே. நாய் விற்ற காசு குரைக்கவா போகிறது?'' என்று. பாவம், அந்த அப்பாவி மானஸ்தர்கள், பதில் பேசாமல் போய் விட்டார்கள்.

ஒரு சமயம் ஒரு சிறந்த எழுத்தாளர் ஒரு நாவலை ''நவரச''த்துக்கு அனுப்பி வைத்தார். நவரசத்தின் பழைய தரத்தை மனத்தில் வைத்துக் கொண்டு அனுப்பி விட்டார். அந்த நாவலைத் திருப்பிக் கொடுத்துவிட்டுச் சந்தானம் சொன்னார்: ''நாவல் பிரமாதம். இலக்கியத் தரம் வாய்ந்தது. ஆனால் 'தீம்' கொஞ்சம் ஹெவி. லைட்டாக ஏதாவது எழுதி அனுப்புங்கள். தமிழ் நாட்டில் இப்போது இவ்வளவு அருமையான நாவல்களைப் படிக்க ஆளில்லை.''

ஆசிரியர் சந்தானத்தின் கணிப்புத் துல்லியமானதுதான். அவருடைய திறமையால், ''நவரசம்'' பத்திரிகையின் புகழும் விற்பனையும் அதிகமாயின. விற்பனை கூடியதால் சந்தானத்தின் ஊதியம் கூடியது. பத்திரிகை ஆசிரியர் என்னும் பதவியால் அவருக்கு விளம்பரமும் பணமும் கிடைத்தது போல, அவருடைய ரசனைக்கு ஏற்ற சந்தர்ப்பங்களும் கிடைத்தன.

இளம் பெண் எழுத்தாளர்களை ஆதரிப்பதிலும் கௌரவிப்பதிலும் மிகுந்த அக்கறை



அடுத்த இதழில்

## நகர் வலம்: புதுதில்லி



கொண்டிருந்தார். அது தம்முடைய கடமை என்றுகூட அடிக்கடி பறைசாற்றிக்கொண்டார். இரண்டொரு இளம் பெண்களை எழுத்தாளர்களாக்கிய பெருமையும் அவருக்கு உண்டு. பத்திரிகையில் தங்களுடைய படங்கள் பிரசுரமாவதிலும் கதைகள் பிரசுரமாவதிலும் சந்தானத்தின் புகழ்ச்சியிலும் அந்த இளம் பெண்கள் மயங்கிப் போயிருந்தார்கள். அந்தப் பெண்களுக்காகச் சந்தானம் செய்திருந்த அந்த மாபெரும் உதவிகளுக்காக அவர், அவர்களிடம் எதிர்பார்த்த கைம்மாறு — ஓ....! விளம்பரமும் புகழும் பெண்களின் அறிவை எப்படிச் சூறையாடி விடுகின்றன!

ஆனால் கோமளத்தின் விஷயத்தில்தான் இதுவரை அவருடைய திறமைகள் பலிக்கவில்லை.

எதிரே இருந்த கோமளத்தைப் பார்த்தார். அவள் சாப்பிட்டவாறே, கலெக்டரிடம் ஏதோ பேசிக்கொண்டிருந்தாள். அவளுடைய முகத்தைச் சற்று நேரம் கண் கொட்டாமல் பார்த்தார். களைபொருந்திய அவளுடைய முகம் அவருடைய நெஞ்சில் ஏக்கத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தது. திடீரென்று நாககந்தரத்தைப் பார்த்தார். அவர், போலீஸ் அதிகாரியின் மனைவியோடு பேசிக் கொண்டிருந்தார். மீண்டும் அவருடைய பார்வை, கோமளத்தை வட்டமிட்டது.

அவளை அவர் முதன் முதலாகச் சந்தித்த சம்பவம் நினைவில் நிழலாடியது.

லேடீஸ் கிளப் ஆண்டு விழாவுக்குத் தலைமை வகிக்கக் கோமளம் வந்திருந்த போது தான் அவளை முதன் முதலாகப் பார்த்தார். ''நவரசம்'' பத்திரிகைக்குஅழைப்புவந்திருந்ததால் பத்திரிகையின் அதிபர் பாண்டுரங்கமும் ஆசிரியர் சந்தானமும் விழாவுக்குச் சென்றிருந்தார்கள். கோமளம், நீதிபதியின் மனைவி என்பதால் விழாவுக்குத் தலைமை தாங்க அழைக்கப் பட்டிருந்தாள். நாககந்தரமும் கோமளமும் காரிலிருந்து இறங்கிய போது, சந்தானத்தின் கவனத்தைக் கவர்ந்தது, கோமளத்தின் கவர்ச்சியான முகம்.

''ஜட்ஜின் மகள் போலிருக்கிறது'' என்று முனகினார் சந்தானம்.

''மகளா...? ஜட்ஜின் மனைவி'' என்றார் பாண்டுரங்கன்.

''மனைவியா?'' — திகைப்புடன் கேட்ட சந்தானம், அவளைப் பார்த்தார். ''ஜட்ஜ் யோகக்காரர்தான்'' என்றார்.

பாண்டுரங்கன் புரிந்து கொள்ளாமல் சந்தானத்தைப் பார்த்தார்.

''இந்த வயதில் இப்படி ஓர் அழகான மனைவி கிடைத்ததைத்தான் சொல்கிறேன்'' என்றார் சந்தானம்.

''இந்த வயதில் அழகான மனைவி கிடைப்பதைப் போன்ற நரக வேதனை கிடையாது'' என்றார் பாண்டுரங்கன். சந்தானம் சிரித்தார்.

சந்தானத்தைக் கோமளத்துக்கும் நாககந்தரத்துக்கும் லேடீஸ் கிளப்பின் காரியதரிசி அறிமுகம் செய்து வைத்தபோது, கோமளம் வியப்புடன் சந்தானத்தைப் பார்த்தாள்.

''உங்களுடைய எழுத்துக்களைப் படித்திருக்கிறேன். இன்றுதான் நேரில் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது'' என்றாள்.

இருவரும் அடுத்தடுத்த நாற்காலிகளில் அமர்ந்தனர்.

''நான் வேறு விதமாக உங்களைப் பற்றிக் கற்பனை செய்திருந்தேன்'' என்றாள் கோமளம்.

''எப்படி?'' — சந்தானம் கேட்டார்.

''நீங்கள் வயது முதிர்ந்தவர் என்று. இவ்வளவு இளைஞராக இருப்பீர்கள் என்று எதிர்பார்க்கவில்லை''என்றாள்கோமளம்வியப்புடன்

''ஓ...! என்னுடைய எழுத்து அவ்வளவா கிழடுதட்டிப் போயிருக்கிறது?''

கோமளம் குபீரென்று சிரித்தாள். அவளுடைய சிரிப்பும் பேச்சும் சந்தானத்தை ஆட்கொண்டன.

''ஒரு பத்திரிகையின் ஆசிரியர், வயது முதிர்ந்தவரா யிருப்பார் என்று நான் தவறாக எண்ணிக் கொண்டதுதான் காரணம்'' என்றாள், கோமளம் சிரித்துக் கொண்டே.

தான் வயதானவனைப் போல் தோற்றமளிக்கவில்லை என்பதைக் கோமளத்தின் வாயிலாகக் கேட்க நேர்ந்தது எவ்வளவு அதிர்ஷ்டம்! அவளுக்கு மறு பக்கத்திலிருந்த நீதிபதி நாககந்தரத்தைப் பார்த்தார், சந்தானம். நீதிபதியின் தலை நரைத்திருந்தது. அதைக் கண்டதும் சந்தானத்துக்கு மிகுந்த திருப்தி ஏற்பட்டது.

மறுநாளே அவளைப் பார்ப்பதற்காக அவளுடைய வீட்டுக்கே சென்று விட்டார். பத்திரிகை ஆசிரியர் என்ற 'லைசென்ஸை' வைத்துக்கொண்டு எங்கு வேண்டுமானாலும் போகலாமே. அவளைப் பார்க்கப் போனபோது, ஆண்டு விழாவில் எடுத்த புகைப்படங்களைக் கொண்டு போக அவர் மறந்து விடவில்லை.

''நவரசம்'' பத்திரிகையின் ஆசிரியருக்கு நீதிபதியின் வீட்டில் நல்ல வரவேற்பு இருந்தது. அவர் போயிருந்தபோது, நாககந்தரம் நீதிமன்றத்துக்குச் சென்றிருந்தார். ஆண்டு விழாவில் கோமளம் பேசியதை வியந்து பாராட்டினார், சந்தானம். அவளுடைய புகைப்படத்தையும், பேச்சின் கருத்தையும் ''நவரச''த்தில் அச்சிடுவதாக அவர் சொன்னதும் கோமளத்துக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. பெருமையால் பூரித்துப்போனாள்.

THE MOST WONDERFUL IDEAS GROW WITH COTTON

# FINISHES



wash-n-wear... stain resistant... non-shrink... finishes-to heighten the utility of the natural fibre...

**Century**– FOR 100% COTTON TEXTILES

THE CENTURY SPG. & MFG. CO. LTD., Bombay 400025



Adroit-CM-540-F

# ஆச்சரியமான சேமிப்புக்கு பிஜ்



2 சிறப்பான, சிக்கனமான பேக்குகள்!
அடுத்து, 5-கி.கி.யில் அல்லது 2-கி.கி.யில் பேக்குகளிலிருந்து உங்கள் டப்பாவில் பிஜ் நிரப்பிக் கொண்டு, ஆச்சரியமான சேமிப்பு செய்யுங்கள்.

மீண்டும் பயன்படும் சிறப்பான பிளாஸ்டிக் டப்பா!
முதலில், ஒரு பைசாகூட அதிகம் கொடுக்காமல், மீண்டும் பயன்படும் டப்பாவில் பிஜ் வாங்குங்கள்.

நுரை கொழிக்கும், சட்டெனத் துலக்கும், கறைகள் போக்கும் பிஜ். ஒரு தனிச் சிறப்புள்ள, பல-பயன்கொண்ட துலக்கும் பவுடர். சேமிப்புக்கு சேமிப்பு; கூடவே, சமையலறைப் பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள், தரை மற்றும் குளியலறைக்குக் கண்ணைப் பறிக்கும் பளபளப்பு!






**பிஜ்** கோத்ரெஜ் தயாரிப்பு

CMGS-60-182 TM

இப்படித்தான் சந்தானத்துக்குக் கோமளத்திடம் பழகும் வாய்ப்புக் கிட்டியது. அடிக்கடி அவளைப் பார்க்கச் சென்ருர். ஒரு பிரபல பத்திரிகை ஆசிரியரின் நட்புக் கிடைத்ததில் கோமளம் பெருமை அடைந்தாள்.

சந்தானம் ஒருநாள் சொன்னுர்: ''ஏதாவது எழுதுங்களேன், ''நவரச''த்தில் பிரசுரிக்கிறேன்.''

''ஏதோ பேசிப் பழகியிருக்கிறேனே தவிர,எழுதிப் பழக்கமில்லே'' என்ருள், கோமளம்.

''பரவாயில்லே. எதையாவது எழுதுங்கள். நான் எடிட் செய்து கொள்கிறேன்.''

''என்ன எழுதுவது?''

'' 'ஜாலி'யாக ஏதாவது எழுதுங்கள்.''

''அப்படி என்ருல்!''

''ரசமாக'' என்று கூறிச் சிரித்தார், சந்தானம்.

''எதைப் பற்றி?''

''இன்றைய பாணியில் எதைப் பற்றி வேண்டுமானுலும் எழுதுங்கள்.''

''இன்றைய பாணி என்ருல்?''

''அதுதான் சொன்னேனே, 'ஜாலி'யாக என்று. அதாவது, 'நியூ வேவ்' பாணி.''

கோமளம் புரிந்து கொண்டாள். ''எனக்கு அதெல்லாம் எழுத வராது'' என்ருள் வெட்கத்துடன்.

''வராது என்று ஒன்றுமில்லே. இன்று ''நவரசம்'' இவ்வளவு பிரபலமடைந்திருப்பதற்குக் காரணமே 'நியூவேவ்' பாணிதான்.. நீங்கள் யோசிக்க வேண்டாம். ஏதாவது எழுதுங்கள். நான் அதில் நியூவேவைப் புகுத்திக் கொள்கிறேன்'' என்ருர் சந்தானம்.

கோமளம் இப்படித்தான் எழுதத் தொடங்கினுள். எழுத்தில் உயிர் இல்லாவிட்டாலும், சந்தானத்தின் நியூவேவ் அதில் புகுந்து அவளைப் பிரபலப்படுத்தி விட்டது. அவளுடைய புகைப்படத்தை ''நவரச''த்தில் அச்சிட்டு அவளைப் பெருமைப்படுத்தினுர். வாசகர்களுக்கு அவளுடைய எழுத்தில் ரசனை ஏற்படாவிட்டாலும் அவளுடைய அழகில் ரசனை ஏற்பட்டது. நீதிபதியின் மனைவி என்ற அந்தஸ்தும் சேர்ந்திருக்கவே, விரைவில் பிரபலமாகி விட்டாள். சந்தானத்துக்கு அவளிடம் மிகுந்த அக்கறை தோன்றியதற்குக் காரணம், அவளுடைய எழுத்தோ அல்லது நீதிபதியின் மனைவி என்ற அந்தஸ்தோ அல்ல. அவளுடைய கவர்ச்சியான உருவம்தான். 'நவரசம்' அவளைப் பிரபலப்படுத்தியது என்பதால், அந்தப் பிரபலத்தை ஏற்படுத்திக் கொடுத்த தமக்கு அவளுடைய அழகிய உருவம் சொந்தமாக வேண்டும் என்று விரும்பியது. பேராசை அல்ல என்றுதான் நினைத்தார் சந்தானம்!

''கதையை நானேயே அனுப்பி வைக்கட்டுமா?'' என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுச் சுய நினைவை அடைந்தார் சந்தானம். கலெக்டரின் மனைவி கனகாதான் பேசியது.




கி. பி. 450ல் சாதகர்னி வமிசத்துக்கு வாரிசில்லாது போயிற்று. இன்றைய கன்னட ராஜ்யத்தை ஆண்டவர்கள் சாதகர்னிகள். ஆட்சியை நடத்த அரசனைத் தேர்ந்தெடுப்பது எப்படி? பட்டத்து யானையின் துதிக்கையில் மாலையைக் கொடுத்து அனுப்பினுர்கள். அது யார் கழுத்தில் அந்த மாலையைப் போடுகிறதோ அவரையே மன்னராக ஏற்பதென்று முடிவு செய்தார்கள். யானை ஓர் ஏழை இடையனின் கழுத்தில் கொண்டு போய் மாலையைப் போட்டது. அவன் பெயர் ஜெயந்தன். கிருஷ்ண வர்ம கதம்பன் என்ற பெயருடன் சிங்காதனமேறினுன் அந்த இடையன். கதம்ப வமிசம் தோன்றியது இப்படித்தான். யானை தேர்ந்தெடுத்த இவனுடைய கதம்ப வமிசம் கன்னட தேசத்தை 600 ஆண்டுகள் (1050 வரை) அரசாண்டது.

—கௌசிகன்



''ஓ.... அனுப்பி வையுங்கள். வேண்டுமானுல் நானே வந்து வாங்கிக் கொள்கிறேன்'' என்ருர், சந்தானம் குழைந்தபடி.

''ஐயோ, நீங்கள் வீணுக அலைய வேண்டாம்'' என்ருள் கனகா.

''உங்கள் வீட்டுக்கு நான் வரக் கூடாதென்ருல் வரவில்லே.''

''நோ, நோ, நான் அப்படிச் சொல்லவில்லே. வீணுக நீங்கள் அலைய வேண்டாம் என்றேன். ''நவரசம்'' ஆசிரியர் என் வீட்டுக்கு வர நான் பாக்கியம் செய்திருக்க வேண்டும்'' என்ருள் கனகா. அவள் முகத்தில் தோன்றிய உற்சாகத்தையும், மலர்ச்சியையும் கண்டு கொண்டார் சந்தானம். அவருடைய மனத்தில் அவளைப் பற்றி வேறு ஒரு கணிப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. (தொடரும்)

# என்னைப்போல் என் கிரா:ப்ளெக்ஸையும் நான் அதிகமாக நேசிப்பவன்...

## அத்துடன் இந்துவுட னும் ஒரு தனியான தொடர்பு கொண்டுள் ளேன்.

உங்களுக்கு ஆர். கிருஷ்ணனை தெரியு மல்லவா? அவர் இந்தியாவின் ஒரு பிரசித்தி பெற்ற புகைப்பட நிபுணர். அவர் ராயல் புகைப்பட நிபுணர் சங்கத் தைச் சேர்ந்தவர். இந்துவின் தரத்தைப் பற்றி அவர் கூறுவதாவது —

"ஒரு நல்ல ரோல் பிலிமும், புரோமைட் பேப்பரும் அளிக்கவேண்டிய எல்லா பயன்களையும், நான் எதிர்பார்க்கும் அளவிற்கு இந்து அளிக்கிறது. தெளி வான மாறுபாடு, சிறப்பான ஒளிப் பதிவு, ஒரே சீரான தரம், துல்லியமான கிரெயின்கள் இவற்றை எனக்கு அளிப்பது இந்து. அது மட்டுமல்ல, இந்து மிக எளிதில் கிடைக்கிறது.

எனவே, எனக்கும், என் கிரா:ப்ளெக் ஸுக்கும் அடுத்தபடியாக நான் இந்துவை நேசிப்பது இயற்கை தானே!"

## இத்துறையில் தன்னிறைவு பெற தன்னிகரற்ற சேவை யில் இந்து அளிப்பவை:

இந்து ரோல் பிலிம். இந்து போட்டோ கிராபிக் பேப்பர்கள். இந்து எக்ஸ்ரே பிலிம். இந்து சினி-பாஸிடிவ். இந்து சினி சவுண்ட் நெகடிவ். இந்து மீடியம் காண்ட்ராஸ்ட் கிராபிக் ஆர்ட்ஸ் பிலிம். இந்து டயாபாஸிடிவ். இந்து டாகு மெண்ட் காபியிங் பேப்பர்.

இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ்
மான்யுபாக்சரிங் கோ. லிமிடெட்
இந்துநகர், உதகமண்டலம் 643 005

## இந்துவின் தரத்துக்குச் சான்று உங்கள் கண் எதிரே.




SAA/HPF/1379




## திணிக்கப்பட்ட வேலைநிறுத்தம்!

'என்ன சேதி' பகுதியில் 'தேசத் துரோகத்தைவிட மோசம்' என்ற தலைப்பிட்டு நெய்வேலிப் பொறியாளர் வேலைநிறுத்தம் பற்றி எழுதியிருந்ததைப் படித்து வேதனை அடைந்தோம்.

நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை, 'ஊதிய உயர்வு ஒப்பந்தம்' ஏற்படுவது நெய்வேலிச் செய்தி. கடந்த 1–1–74ல் புதுப்பிக்கப்பட வேண்டிய ஒப்பந்தம் இன்றுவரையில் எங்களுக்குப் புதுப்பிக்கப்படவில்லை. நெய்வேலிப் பொறியாளர்கள் பத்து மாதங்களுக்கு முன்னரே நிறுவனத்திடம் கோரிக்கைகளைத் தந்து தங்களுக்கு என்று ஒப்பந்தம் ஒன்றினை ஏற்படுத்திக் கொள்ளத் தங்கள் பொறியாளர்கள் கூட்டமைப்பின் மூலம் வேண்டினர். தொழிலாளர் வேலைநிறுத்தம் செய்வதாக அறிவித்தவுடன் நிறுவன நிர்வாகம் பொறியாளர் கூட்டமைப்பினை அழைத்து, ''உங்கள் கோரிக்கைகளில் பல நியாயமானவை; தொழிலாளர் ஒப்பந்தம் ஏற்பட்டவுடன் அவைகளில் பெரும்பாலானவற்றைத் தருகிறோம்'' எனப் பசப்பு மொழி பேசித் தொழிலாளர் ஒப்பந்தம் ஏற்பட்டதும் சொன்னதைக் காற்றில் பறக்கவிட்டு வாளாவிருந்தது. மீண்டும் பேசிடச் சென்ற கூட்டமைப்பிடம், ''எனது நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை'' எனப் பேச்சுவார்த்தைக்கான வாய்ப்பினை நிறுவனத் தலைவரே கதவடைத்து சாத்திவிட்டார்.

பொறுப்புமிக்க உயர் அதிகாரிகள் எங்கள் நியாயங்களை எடுத்துச் சென்று சொன்னார்கள். அவர்களுக்கும் அதே போன்ற பதிலும் இரட்டைத் தாழ்ப்பாளுமே கிடைத்தன.

மீண்டும் மாநிலத் தொழிலாளர் நல கமிஷனர், தொழிலாளர் நல மாநில அரசுச் செயலர், மாண்புமிகு தமிழக தொழிலாளர் நல அமைச்சர் ஆகியோரின் முன்னிலையில் பல நாட்கள் பேச்சுவார்த்தைகள் நடந்தன. அவர்கள் அனைவரின் நன்முயற்சிகளும் நிர்வாகத்தினரின் விட்டுக் கொடுக்காத தன்மையாலும், அலட்சியப் போக்கினாலும் வீண் அடிக்கப்பட்டன.

எல்லாவற்றுக்கும் மேலாகக் கடந்த 1971ம் ஆண்டு தமிழக முதல்வர் முன்னிலையில் ஒப்புக் கொண்டு கையெழுத்திட்டபடி பஞ்சப்படி வகையில் நாற்பது ரூபாய்க்கும் மேலே மாதம் ஒன்றுக்குத் தர வேண்டிய பணத்தினை அன்று முதல் இன்று வரையில் தரவில்லை.

மின்சாரப் பஞ்சம் தலைவிரித்தாடிய மாதங்களில் நம்முடைய கோரிக்கையைக் காட்டிக் கிடுக்கிப்பிடி போடுவது மனிதாபிமானம் அற்ற செயலாகும் என ஒதுங்கி நின்றோம். எல்லாம் கடந்து கால மழை பெய்து தமிழகம் மின்சாரப் பஞ்சத்தைக் கடந்தபின் வேறு வழியின்றி எங்கள்மீது திணிக்கப்பட்ட வேலைநிறுத்தத்தை ஏற்றுக் கொண்டு வாய்ப்புக் கிடைத்த முதல் நிமிஷத்தில் வேலை நிறுத்தத்தை நிறுத்திக் கொண்டோம். இது தவறு?

வி. நா. பண்டரிநாதன்

நெய்வேலி-1 — அமைப்பாளர்: பொறி இயல்
3–9–74 — சங்கங்கள் கூட்டணி

## பரிசுச் சீட்டினால் பயன்!

சிறுவர், சிறுமியர்கள் பரிசுச் சீட்டு விற்பனையைக் கண்டிப்பது போல் எழுதி, அரசின் பரிசுச் சீட்டுத் திட்டத்தை வெகுவாகக் குறை கூறியுள்ளீர்கள். பரிசுச் சீட்டு விற்பனைத் திட்டத்தின் வருவாயில் எத்தனை முக்கிய சமுதாயப் பணிகள் நிறைவேற்றப்படுகின்றன என்பதையும் அதன் மூலம் பெருகும் வேலை வாய்ப்பையும் எண்ணத்தில் கொள்ள வேண்டும். பரிசுச் சீட்டு விற்பனை மூலம் கிடைக்கும் கமிஷனில் பல குடும்பங்களின் காலட்சேபம் நடந்து வருகிறது.

திருமங்கலம்
6–9–74 — அ. பாண்டியராசன்

சமுதாயப் பணிகள் நிறைவேறத்தான் அரசு வரி வசூலித்து வருகிறது. வேலை வாய்ப்புக்கள் பெருகப் புதிய புதிய தொழில்களில் முதலீடுகள் பெருகக் கூடிய நல்ல சூழலை மத்திய, மாநில அரசுகள் உருவாக்க வேண்டும். பரிசுச் சீட்டு விற்பனைக் கமிஷனில் சில குடும்பங்கள் பயனடைகின்றன என்பது போன்ற வாதம் குதிரைப் பந்தயத்துக்கும் மதுக் கடைகளுக்குங்கூடப் பொருந்தும். ஆயின் இவ்விஷயங்களில் சமுதாயத்தின் ஒட்டுமொத்தமான நலனைத்தான் அரசு கருத்தில் கொள்ள வேண்டும். லாட்டரிச் சீட்டு ஒருவகை சூதாட்டமே. அதற்கு அரசே ஆதரவு தருவது சிறிதும் சரியல்ல.

- ஆசிரியர்

## ஐந்தாவது பெருமை!

திரு லால்குடி ஜெயராமன் குறிப்பிட்டதுபோல் திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பரிசு பெற்றதில் நாம் நான்கு விதத்தில் பெருமை அடைந்திருப்பதாக நான் நினைக்கவில்லை. தமிழ்ப் பெண்குலம் அடைந்திருக்கும் பெருமையையும் சேர்த்து ஐந்தாக எண்ணுகிறேன்!

சென்னை–14
13–9–74 — எஸ். கிருஷ்ணவேணி

ஐந்தாவது பெருமையைச் சுட்டிக் காட்டிய சகோதரிக்கு நன்றி. மேற்படி இதழின் அட்டைப் படத்தில் இடம் பெற்றுள்ள ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் அருமையான புகைப்படத்தைப் பார்த்துவிட்டு 'இதை எடுத்தது யார்? அதைப் போட மறந்துவிட்டீர்களே?' என்று கேட்டவர்களுக்கும் பதில்: கே. விசுவநாதன்

# கிணறு

வையவன்

இயந்திரங்கள் வேலை செய்து கொண்டிருந்தன. ராடுகள் சுழன்று பாறைகளின் கல் மனத்தைக் குடைந்து குடைந்து குறிகள் போட்டுக் கொண்டிருந்தன.

அந்த யந்திரம் செய்த சித்து வேலைகளை இமைகொட்டாமல் பார்த்தான் நாச்சிமுத்து.

இப்படி ஒரு யந்திரம் மூன்று தலைமுறைகளுக்கு முன் இருந்திருந்தால் நம் வம்சம் இவ்வளவு சீர்குலைந்து போயிருக்காது என்று அவனுக்குப் பட்டது.

அதற்குள் கிணற்றுக்கு மேலே யாரோ வந்து நிற்பது நிழலாக விழுந்தது. அவர் காலில் இடறிக்கொண்டு ஒரு கல் புரண்டு கொண்டு வந்தது.

''யார்ராவன் அறிவு கெட்டவன். ஆளுங்க கண்ணுக் தெரியலே'' என்று யந்திர இரைச்சலை மீறிக் கத்திக் கொண்டு நிமிர்ந்து பார்த்தான் நாச்சிமுத்து.

அவன் பார்வை எழுபதடி உயரத்துக்கு மேல் பாறையும் முரம்பு மண்ணுமாகத் தாண்டிக்கொண்டு மேலே சென்றது.

அவனுடைய எட்டு வயதுப் பேரன் நின்று கொண்டிருந்தான்.

''டேய், கண்ணு, ஓரமாப் போடா... விழுந்துடப் போறே'' என்று கத்தினான். கிணற்றின் ஆழத்திலிருந்து பேசியதால் எதிரொலியும்கூட இரைந்தது.

அவனுக்குச் சட்டென்று ராமலிங்கத்தின் தகப்பனை தனது மகன் சுந்தரத்தின் கவனம் வந்தது.

'காலேயிலிருந்து இந்த மிசின் வேலை செஞ்சுக்கிட்டிருக்கு.... அவ ஏன் என்னுன்னு கூட வந்து பாக்கலியே... வீட்டிலே இருந்து எல்லாரும் வந்தாங்க. பொண்ணுங்களெல்லாம் வந்து கெணத்தைச் சுத்திக்கிட்டு நிக்குதுங்க. அவன் பொண்டாட்டி கூட ஒரு சொல் வரப் போகுதுன்னு வந்து தலையைக் காட்டிட்டுப் போயிட்டா. இவன் வரவேயில்லேயே.'

குனிந்து நாச்சிமுத்து இயந்திரம் போட்ட குழிகளைப் பார்க்கத் தொடங்கினான். மேலே நிமிர்ந்து பார்ப்பதற்கு முன்னிருந்த தெம்பு இப்போது போய் விட்டது. ஒவ்வொரு குழிக்கும் பத்துப் பத்து ரூபாய் கடன் ஏறுவது போல் ஒரு நுட்பமான கணக்குப் புத்தி அவன் மகிழ்ச்சியைச் சீர் குலைத்தது.

'அவனுக்கு என்ன இதையெல்லாம் வந்து பார்க்க வேணும்னு. அவனைப் பொறுத்த வரை இந்த இயந்திரம் கூட அப்பன் ஆடும் இன்னொரு சூதாட்டம் போலத்தான் படும். மூணு வருஷமா கிணறு வெட்டுன்னு காதிலே விழுந்தாக்கூட அவனுக்கு உடம்பெல்லாம் பத்தி எரியுது.

'எரியாதா பின்னே... ஒரு தலைமுறையா இரண்டு தலைமுறையா... என்னோட இது மூணாவது தலைமுறை. கிணறு கிணறுன்னு தண்ணித் தாகத்துக்காக இந்த அஞ்சு ஏக்கராவிலேயும் கொத்திக் கொதறிப் பார்க்காத இடமில்லே... இந்த வம்சம் தண்ணி தேடி அலைஞ்ச வம்சம்னு ஊருக்கே தெரியுமே... இதோ இப்பக் கரண்ட் வெடி வெச்சிப் பாக்கறுங்களாம்னு ஊரு எப்படிக் காத்துக்கிட்டிருக்கு. என்னமோ எலெக்ஷன்லே முடிவு சொல்றதுக்கு முன்னாடி ஜனங்க ஆவல்படறமாதிரி முப்பது நாப்பது பேர் கெணத்தைச் சுத்தி வேடிக்கை பாத்துக்கிட்டிருக்காங்க.'

தன் பிள்ளை வராததற்காக அவன் சார்பில் நியாயம் கற்பித்துக் கொண்டு போன நாச்சிமுத்துவின் மனம் ஊர் கூடிநின்று தண்ணீரைக் காணப் புதையல் எடுப்பது மாதிரி அவன் படுகிற பிரயாசையை வேடிக்கை பார்க்கும் உணர்வு வந்ததும் மீண்டும் அங்கலாய்த்தது.

'ஒன் தலைக்குக் கடனை வச்சுட்டு நான் சாக மாட்டேன்டா சுந்தரம்னு எத்தனை தடவை அவன்கிட்டே தைரியம் சொல்லியிருப்பேன். பாவிப் பையன் மூணு மாசமா பேச்சுவார்த்தையையே நிறுத்திப்பிட்டானே. யாருக்காக இனிமே இந்தக் கெணத்தை





ஐம்பதாண்டுகளுக்கு முன்பிருந்த துணிச்சல்!

இந்தியாவிலே 1924ம் வருடம் அக்டோபர் மாதத்தில் ரயில் கட்டணங்கள் குறைக்கப்பட்டன! அப்போதிருந்த ஜி. ஐ. பி. ரயில்வே நிர்வாகம் இத்துணிகரச் செயலைப் புரிந்திருக்கிறது. முதல் முந்நூறு மைல்களுக்கு முதல் வகுப்புக் கட்டணம் மைலுக்கு முப்பது பைசாக்கள் (பழைய பைசா, 3 பைசா = காலணா என்றிருந்தபோது) என்றிருந்ததை ஒரு மைலுக்கு 24 பைசாக்கள் என்று குறைத்தது! இரண்டாம் வகுப்புப் பிரயாணத்தில் முதல் முந்நூறு மைல்களுக்கு மைலுக்கு 15 பைசாக்கள் என்றிருந்ததை 12 பைசாக்களாக மாற்றியது! நகவல் : சுதாகரன்

ஆதாரம்: ஹிந்து

---

வெட்டறேன். அவனுக்காகத் தானே அவன் ஒருத்தனுக்காகத்தானே இந்தத் தள்ளாத வயசிலே எனக்கு இத்தனை பாடு! இது வெறும் பாடு மட்டுமா? இந்த மோட்டுப் பூமியிலே கெணறு வெட்டிப் பம்பு செட்டுப் போட்டு, தென்னையும், வாழையும் கரும்புமா குளுகுளுன்னு கண்ணுக்குப் பச்சுனு ஒரு தரம் பார்த்துடணும்னு பாட்டனாரு ஆனமட்டும் பார்த்தாரு... அதே ஏக்கத்திலே செத்துப் போனாரு... அப்பா சாகறப்பவும் 'நாச்சிமுத்து... ஆனவரைக்கும் பாத்தேண்டா. மோட்டு நெலமும் வறட்டுக் கெணறுமா அந்த பிள்ளைங்களோடே விட்டுட்டுப் போறேனே'ன்னு கையைப் பிடிச்சுக்கிட்டுக் கதறினாரு. நானும் அப்பிடியேவா ஏங்கிக்கிட்டுச் சாவட்டும்?

'கடன் கடன்னு அஞ்சி நடுங்கறனே படுபாவி... அந்த ஏக்கராவிலேயும் தண்ணி மட்டும் விழுந்துட்டா ரெண்டு வருஷத்திலே கடன் தூசாய்ப் பறந்துடுமே... அது புரியலியே இந்தப் படிச்ச மடையனுக்கு!

'இந்த பூமிக்குப் பயந்துக்கிட்டு சைக்கிளிலே ஏறி இஸ்கூலுக்கு ஓடிப்பிட்டானே இவன் என்ன வெள்ளானன்? பத்துத் தரம் தோப்புக்கரணம் போட்டு அதிகாரிக்கு சலாம் பண்ணி மாசச் சம்பளம் வாங்கவா இவனைப் படிக்க வச்சேன்? இந்த மண்ணோட இவன் படிப்பை ஒட்டினு பூமியிலே தண்ணி பாய வைப்பான்னு நெனைச்சுப் படிக்க வைச்சா இவன் மண்ணை ஒதறிட்டு ஓடுறானே...எங்கே போயி வேர்பிடிக்க நிப்பான்?..'

''நாச்சிமுத்து, இந்த ராடைக் கொஞ்சம் புடி'' என்று ஆபரேட்டர் கத்தினார். சிந்தனை குலைய நாச்சிமுத்து எழுந்து போனான்.

பிசாசு வேகத்தோடு அந்த ஆக்கர்போடும் ராட் அவன் பிடியை அதிர வைத்தது. அதன் உதைப்பை அனுபவிக்கும்போது அவனுக்குள் உரம் ஏறிற்று.

'மோது, மோது. வாழ்க்கையோட மோது. உனக்கு வயசாகிப் போனா என்ன, ஒனக்குப் பின்னே துணை வராட்டா என்ன, இந்த மண்ணிலே தண்ணி பாயணும்னு ஒங்க பாட்டன் நெஞ்சிலே ரத்தம் சொட்டியிருக்கு. ஒங்கப்பன் கண்ணிலே தண்ணி கொட்டியிருக்கு. தெய்வத்தின் காதிலே விழலேன்னாலும் இந்த பாறை மனசுக்குள்ளே விழும். மோது மோது'

ராடுகள் உலுக்கியெடுத்தவாறு சுழலும் வலிமையைத் தன் வைராக்கியத்தால் தாங்கிப் பிடித்தான் நாச்சிமுத்து. அவன் முகம் யந்திரத்தின் வலிமைக் கெதிராகப் போராடுவதிலிருந்த வெறியில் பிரகாசித்து நிமிர்ந்து ஆபரேட்டரைப் பார்த்தான்.

ஆபரேட்டர் அந்தக் காட்சியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

''முத்தண்ணா, நீங்க விடுங்க. ஒங்க கை ஒதறுது. உங்க பிள்ளை வாத்தியாரு எங்கே, ஸ்கூலுக்குப் போயிட்டாரா?'' என்று அவன் பற்றியிருந்த ராடைப் பிடிக்க முன்வந்தான் கேசவன். அவன் ஊர்க் குடியானவன். நாச்சிமுத்துவின் கிணற்றில் இந்த முறையாவது தண்ணீர் வந்துவிட வேண்டுமென்ற கிராமத்து அபிலாஷையின் பிரதிநிதி.

நாச்சிமுத்து நகர்ந்து கொண்டான். பிள்ளையைப் பற்றிச் சொல்ல ஒன்றுமில்லை. ஆனாலும் கேள்வியின் கூர்மை மனசைக் கிறிவிட்டது.

'ஊர்க்காரங்களே கேட்டுட்டாங்க. மூணு தலைமுறையா கெணறு வெட்டின குடும்பத்திலே பொறந்த பிள்ளை வீட்டுக்குள்ளே தூங்கிக்கிட்டிருக்கு. பாக்கறவங்க ஏதாவது நெனைப்பாங்கன்னு ஊருக்குப் பயந்தாவது வந்து தலையைக் காட்டப்படாது!'

நாச்சிமுத்துவுக்கு அந்த விஷயம் சட்டென்று ஆவேசம் வந்த மாதிரி உறுப்பிற்று. படிகளின் மீது அழுந்தக் கால்வைத்தவாறு வேகமாகக் கிணற்றுக்கு மேலே போனான்.

கிணற்றின் ஓரமாக நின்று கொண்டிருந்த பேரன் ராமலிங்கத்தைப் பார்த்து, ''ஒங்கப்பன் வீட்டிலே படுத்துக்கிட்டிருப்பான். கெணத்துக்கு வெடி வைக்கிறாங்கன்னு கூப்பிட்டுக்கிட்டு ஓடியா!'' என்று அவனை முடுக்கினான்.

''போ தாத்தா. நான் மாட்டேன்'' என்று முழங்காலில் கையை ஊன்றியவாறு குனிந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ராமலிங்கம் ஆழ்ந்து போயிருக்கும் மனசைக் கலைத்துக் கொள்ள விருப்பமின்றிச் சொன்னான்.

''போடா கண்ணு. உனக்குப் பம்பரம் வாங்கித் தர்றேன்.

பம்பரம் என்ற வார்த்தையைக் கேட்டதும் ராமலிங்கத்துக்குக் கண்கள் விரிந்தன. இருந்தாலும் முன்னெச்சரிக்கையாக ''எப்போ?'' என்று கேட்டுக் கொண்டான்.

''இன்னிக்குச் சாயங்காலம்!''

''நெஜம்மா? அப்புறம் ஏமாத்தக்கூடாது!''

''இல்லே. போய்க் கூட்டிக்கிட்டு வா.''

வயல் வரப்புகளில் பேரன் ஓடினான். அவன் ஓடும் வேகத்தையும் சாயலையும் பார்த்துக்கொண்டிருந்த நாச்சிமுத்துவின் கண்களுக்குக் கொல்லை கொல்லையாகக் கிணறு வெட்டித் தோற்ற சின்னங்களாக முரம்புத் திட்டுக்கள் குன்று குன்றாய் நிற்கும் காட்சி தெரிந்தது.

'இந்த வருஷம் எல்லா மண்ணையும் தண்ணி நெலத்துக்கு அடிச்சுடணும். மொரம்பு மண்ணு பூமிக்கு நல்ல வலுவான உரமாகும். கரும்பு போட்ட கை நிடத்துக்குப் பன்னெண்டு மொழம் வரும்.'

தனது மனக் கோட்டையை நினைத்துச் சிரித்தான் நாச்சிமுத்து.

'அடியே'ங்கறதுக்குப் பெண்டாட்டியைக் காணோம். அதுக்குள்ளே புள்ள உத்தியோகம் பார்க்குமான்னு ஜோசியம் பார்த்த கதை... தண்ணி எங்கே இருக்கு கரும்பு மொழம் போட்டு நிக்க?

அவனது பார்வை வம்ச வம்சமாக வானம் திறந்தால் தவிர தண்ணீருக்கு வக்கற்ற அந்தப் பூமியை ஏக்கத்தோடு பார்த்தன.

வானத்தை நாச்சிமுத்து அண்ணாந்து பார்த்தான். மனித முயற்சிகளை எள்ளிச் சிரிப்பது போல் சூரியன் காய்ந்தான். அந்தத் தவிப்பைப் பார்த்தபோது கீழே கிணற்றில் நடந்து கொண்டிருக்கும் வேலை குறித்துப் பயமாக இருந்தது.

'இதுவும் ஒரு கடனுப் போனு.. ஐந்நூற்றி எண்பது ரூபா. வீட்டை அடமானம்போட்டு வாங்கிய பணம். இதோ வேட்டுக்கு ஆயத்தம் பண்ணிக்கிட்டிருக்காங்க. ஒரு வேட்டு அவுட்டாவிடும். அப்பவும் தண்ணி வரலேன்னு?'

அவன் நெஞ்சு அதிர்ந்தது. 'சீ இதென்ன அல்ப புத்தி. அப்படி நடக்காது. அதை மொதல்லே நான் நம்பணும். அந்த நம்பிக்கை இருக்கதனுலேதானே இஸ்டாம்பு மேலே கையை நாட்டிப் பணத்தை வாங்கினேன். ஏதோ ஒரு நம்பிக்கை இருக்கிறதனுலேதானே இந்தப் பாறுங்கல்லைப் பொளக்குக்கிட்டிருக்கேன். என்னே நானே நம்பாட்டி... அடிடா செருப்பாலே' என்று தன்னே உறுதி செய்து கொண்டான்.

தூரத்திலே வீட்டுக்குப் போன பேரன் திரும்பி ஓடி வந்து கொண்டிருந்தான்.

''என்னடா சொன்னுன்?''

''அவுங்க வரலியாம் தாத்தா. அவங்களுக்கு வேலே இருக்காம்!'' என்று முகத்தில் அறைந்த மாதிரி ஆகிவிட்டது நாச்சிமுத்துவுக்கு. முகத்தில் பரவிய அவமானம் பேரனுக்குத் தெரிய வேண்டாம் என்று துண்டினுல் முகத்தைத் துடைத்தவாறே ''சரி...'' என்று கீழே இறங்கினுன் நாச்சிமுத்து.

''வெடி ' வைக்கப் போறுங்க, தூரப் போங்க, தூரப் போங்க'' என்று கத்தினுர் ஆபரேட்டர்.

''தூரப் போங்க... ஓடுங்க... இன்னும் தூரமா!'' என்று விரட்டினுன் நாச்சிமுத்து.

கிணற்றைச் சுற்றிக் குழுமியிருந்த கூட்டம் அந்தக்கரம்பு நிலத்தில் ஓடும் காட்சி எதற்கோ அஞ்சி மக்கள் ஓடுவது போல் வேடிக்கையாகத் தோன்றியது.

''டொம்'' என்று அமுக்கலான தொனியில் பேரிரைச்சல் கேட்டது. பூமி அதிர்ந்தது. பாறையும் கற்களும் புகையுமாகப் பூவாணத்துப் பொறிகள் உதைத்துக் கிளம்பிய மாதிரி கிணற்றுக்கு வெளியே பறந்தன.

ஒரு நிமிஷம் மௌனம்.

விஷமக் கவிதை - 1



பலன்

தொண்டுக் குழைத்தோர்
தொலேவில் இருந்தார் - அதைக்
கொண்டு பிழைத்தோர்
கொலுவில் இருந்தார்!

- தமிழமுதன்

''ஓடியாங்கடா பார்க்கலாம்'' என்ற குரல்கள். திமுதிமுவென்று ஆட்கள் ஓடிவரும் ஓசை.

''முத்தண்ணு... டேய் முத்தண்ணு விழுந்திட்டிருக்காருடா. ஐயையோ! கல் தாக்கிடுச்சே... வாத்தியாரைக் கூப்பிடு... சுந்தரம்... சுந்தரம்...'' என்று கிலியோடு கூவினுன் ஒருவன்.

நாச்சிமுத்துவின் மண்டையில் ஒரு கல் விழுந்து ரத்தம் ஊற்றுக் கிளம்பி வழிந்தது. மண்டையில்... நெற்றியில்... கண் மீது.. நாச்சிமுத்து சட்டென்று தலையில் வலித்த பாகத்தைக் கைகளால் அழுத்திக் கொண்டான். கூட்டம் அவரைச் சுற்றிக் கூடிற்று.

''கெணத்தை யாராவது போய்ப்பாருங்க'' என்று கமறிய குரலில் கூறினுன் நாச்சிமுத்து. யாரோ போனவர்கள் கத்தினுர்கள்.

''ஒரே பொகையா இருக்கு... பொகை அடங்கல்லே...''

அதற்குள் சுந்தரம் எழுந்து ஓடி வந்தான். தூரத்திலேயே தலையிலும் நெற்றியிலும் ரத்தத்துடன் தந்தை அமர்ந்திருப்பது அவன் கண்ணில் பட்டு நெஞ்சில் ஈட்டி எறிந்தது.

''அப்பா, அப்பா!'' என்று கதறியவாறே அவன் ஓடிவந்தான்.

கிணற்று ஓரமாக ஒரு குரல் கூவிற்று.

''முத்தண்ணே! ஊத்து வந்திடுச்சி...பீச்சியடிக்குது. ஒரு கை தெப்பம் தண்ணி வந்துடுச்சி... தண்ணி வந்துடுச்சி...''

ஜில்லென்று ரத்தம் துள்ளிற்று நாச்சிமுத்துவுக்கு.

ஒரு வம்சத்து இருட்டில் பளிச்சென்று வாள் மாதிரி வெளிச்சம் பாய்ந்த பரவசம்.

''தம்பி, ஊத்து வந்திருச்சாண்டா ஊத்து வந்துடுச்சாம்'' என்று கத்தியவாறே கூடியிருந்தவர்களின் கையை உதறிக்கொண்டு நாச்சிமுத்து கிணற்றை நோக்கி ஓடினுன். கை இன்னும் தலையைப் பிடித்துக்கொண்டிருந்தது.

பிரமித்து நின்றுன் சுந்தரம். அந்த ஊற்றும், அதற்கு அவன் அப்பா உழைத்த உழைப்பும் காட்டிய பிடிவாதமும் எப்பேர்ப்பட்ட விஷயங்கள்! தன்னே மறந்து ஓடிய ஓட்டத்தில் தரையில் சிந்திக் கிடந்த ரத்தத் துளிகள் பேசுவது போலிருந்தது. அவனுக்கு மெய்சிலிர்த்தது.

''அப்பா!'' என்று கூவிக் கொண்டே நாச்சிமுத்துவின் பின்னுல் ஓடினுன் சுந்தரம்.















1898

